ஓம்

ஸ்ரீ நந்திகுருவே நம ;

குருவே சிவமெனக் கூறினான் நந்தி



# ஸ்ரீ நந்தியடி சுவாமிகள் வரலாறு



ஸ்ரீ பகவதி சேவா சங்கம்

உளி மாவு

பன்னர் கட்டா ரோடு, பெங்களூர் - 76.

இலவச வெளியீடு 1991 தீப காணிக்கை

ஓம்
ஸ்ரீ நந்திகுருவே நம ;

குருவே சிவமெனக் கூறினன் நந்தி



# ஸ்ரீ நந்தியெம்பெருமான்

திருவடி சரணம்

# பதிப்புரை

அன்புடையீர்! வணக்கம்,

எங்களது 5-வது இலவச வெளியீட்டு இதழான இந்நூலைவெளியிட தூண்டுதலாக இருந்த ஸ்ரீமீனாட்சி நாடி சோதிட சக்கரவர்த்தி தவத்திரு அ. நல்ல குரு தப்ப சுவாமிகள் அவர்களுக்கும், உயர்திரு நா. கா மு. மாயவரம் சுவாமிகள் அவர்களுக்கும் எங்களது மனமார்ந்த நன்றி.

ஸ்ரீ நந்திஅடி சுவாமி அவர்களின் வரலாற்றை எங்களது 5-வது இலவச இதழாக வெளியிடுவதில் மிகவும் பெருமைப்படுகிறோம். நன்றி!

பெண்ணாடம்,
11—2—91.

இப்படிக்கு,
**வே. இராமசாமி**

பிரம்மஸ்ரீ நந்தியடி சுவாமிகள்



தோற்றம்: 1862 முக்தி: 1928

5/4

உ

# குருவே துணை

''நந்தியடிகள் நளின மலர்ப்பாதத்தைச்
சிந்திக்கப் போம் தீவினை''

## நாடு

செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே - எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே - பாரதியார்

என்று கவிக்குயில் பாரதியார் பாடினர்.

## தமிழ் நாடு

''செந்தமிழ் நாடு, வடக்கே திருவேங்கடமாம்திருப்பதி மலையும், தெற்கே கன்னியாகுமரியும், கிழக்கும் மேற்கும் வங்காளக் குடாக் கடலும், அரபிக்கடலும் ஆகிய நான்கு எல்லைக்குட்பட்ட நல்ல நாடாகும். சேரசோழ பாண்டியர்களால் ஆளப்பட்ட, இந்தத் தமிழ்நாடு வேறுபல உட்பிரிவுகளையும் உடையதாகப் பண்டைக்காலத்தில் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் நடுநாடென்பதும் ஒன்று. அந்த நடு நாடு திருமுனைப் பாடி நாடு என்றும் வழங்கி வந்தது.

## நடு நாடு

நடு நாடென்பது, இப்போது தென்னாற்காடுஜில்லாவில் கடலூர் தாலூகா, விழுப்புரம் தாலூகா, விருத்தாசலம்

தாலூகா, கொண்ட ஒரு பிரிவு, அக்காலத்தில் நடுநாடென்ற பெயரோடு வழங்கி வந்தது. நடுநாட்டின் பெருமை, நம் தமிழ்நாட்டிற்கே தனிச் சிறப்புடையதாகும். சைவ சமய ஆசாரிய மூர்த்திகளுள் திருநாவுக்கரசர் எனும் தமிழ் வேந்தர் திருவவதாரம் செய்த திருவாமூர் என்ற பழம்பதி நடுநாட்டில் உள்ளது. வன்தொண்டராம் சுந்தரமூர்த்தி நாயனர் தோன்றியருளிய திருநாவலூரும் நடுநாட்டில்தான் இருக்கிறது' சைவசமயத்திற்கே ஞான சூரியனுக விளங்கி, சிவஞானபோதம் செய்தருளிய, மெய்கணட தேவநாயனர் நடுநாட்டில் பெண்ணடகத்திலே தோன்றினர்கள். மெய் கண்ட தேவ நாயனரின் மாணுக்கரும், சிவஞான சித்தியார் செய்தருளினரும் ஆகிய அருள் நந்தி சிவாசாரிய சுவாமி களும் திருத்துறையூரில் சமாதி எழுந்தருளி நடுநாட்டை அழகு செய்கிறுர்கள்.

## நாட்டின் பெருமை

சைவ நன் மக்களுடைய பெரிய கோயிலும், எல்லாச் சமயங்கட்கும் பொதுவானதும், பண்டைப் பழம்பதி எனப் போற்றப்படுவதுமாகிய ஞான சிதம்பரமாகிய, பொன்னம் பலமும் நடுநாட்டில் காட்சியளிக்கிறது. சுந்தரரைத் தடுத் தாட்கொண்ட திருவெண்ணெய்நல்லூரும் அப்ப மூர்த்தி களைச் சூலை நோயால் ஆட்கொண்ட திருவதிகை வீரட்டான மும் நடுநாட்டிலேதான் உள்ளன. வைணவப் பெரியார்க ளாகிய முதல் ஆழ்வார் மூவரும் போற்றிய திருக்கோவலூர் என்னும் தெய்வப்பதியும் அந்நாட்டிலே காட்சியளிக்கிறது. கெடில நதியும், பெண்ணையாறும் பெருக்கெடுத்தோடி அந் நாட்டினை அழகு செய்கின்றன. பொன்னினையும் முத்தையும் மணியினையும் கொழித்தரித்தோடும் கங்கையினும் சிறப்பு மிக்க மணிமுத்தாற்றங்கரையில் கறைக் கண்டன் உறை கோயிலாகிய, விருத்தாசலமும் அந் நடு நாட்டை அலங் கரிக்கிறது. இத்தகைய தெய்வப் பெரியோர்களும், கடவுள் திருநகரங்களும் அமைந்து விளங்கும் பெருமையினையுடைய

நடுநாட்டின் கண்ணே திருவகீந்திரபுரம் என்ற ஒருதிருநகரம் உள்ளது.

இத்தகைய பெருமை அந்நாட்டுக்கு உண்மையால்தான், அடியார்களின் வரலாறு கூறிவந்த தெய்வத் தமிழ்க் கவியாகிய சேக்கிழார் பெருமானும்,

''மறந்தரு தீ நெறிமாற மணிகண்டார்
வாய்மை நெறி அறந்தரு நாவுக்கரசும்
ஆலால சுந்தரரும், பிறந்தருள உளதானல்
நம்மளவோ பேருலகில் சிறந்த திருமுனைப்பாடித்
திறம்படும் சீர்ப்பாடு''

என்று கூறி நடு நாட்டினைப் பெருமைப்படுத்தினர்கள்.

## திரு நகரம்

அத்தகைய நடு நாட்டின் கண்ணது திருவகீந்திரபுரம் என்றாலே அந்த ஊரின் சிறப்பு சொல்லாமலே அமையும். திருவகீந்திரபுரம் என்ற இந்தப் பழம்பதி ஆழ்வாராதிகளில் திருமங்கை மன்னனால் பாடப்பெற்ற பெருமையுடையது. நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளில் ஒன்று. அகீ என்றால் பாம்பு. பாம்பாகிய ஆதிசேஷனும், இந்திரனும், வழிபட்டு வரம்பெற்றதால் திருவகீந்திரபுரம் என்றபெயரையுடையது பிரமன்,மால்,சிவன் என்ற மூவரும் ஒருவராய் நின்று காட்சியளிக்கும் திருப்பதி. அதனாலேயே அத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள பெருமாளுக்கு மூவரும் ஒருவராய மூர்த்தி என்று பெயர் வழங்குகிறது. தேவநாதப் பெருமாள்என்றும் போற்றுவார்கள்.

## நகரச் சிறப்பு

வைணவப் பெரியார்களுள், வடகலை வைணவப் பெரியாராகிய வேதாந்த தேசிகர் என்ற பெரியார் அவ

தரித்த திருப்பதி திருவகீந்திரபுரம். தென்கலைப் பெரியாராகிய மணவாள மாமுனிகளின் திருச்சந்நிதியும் ஆங்கு உண்டு. இன்றும் தேசிகருடைய இடமும், அவருக்குத் தனிச் சந்நிதானமும், பூசைவழிபாடும், வைணவப் பெரியார்களின் வழிபாடும் அங்கு உண்டு. கெடிலம் என்னும் நதி நகரினையும் கோயிலையும் வலம் கொண்டு போகும் காட்சி மனதைக் கவருவதாய் இருக்கிறது.

நகருக்குக் கிழக்காகவும், திருக்கோயிலுக்குக் கிழக்கிலும் மலையும் மலைக்கோவிலும் வழிபடுவோர்க்கு மிகுந்த அமைதியையும், இன்பத்தையும் அளிக்கிறது. திருமாணிகுழி என்ற மகாபலிச் சக்கரவர்த்தி வழிபட்டிருந்த சிவக்ஷேத்திரம் மேற்கேயும், திருநாவுக்கரசர்க்கு அருள் செய்த திருவதிகை வடக்கேயும், நாவுக்கரசர், கல்லையே தோணியாகக் கொண்டு ஐந்தெழுத்தின்புணை பற்றிக் கடலினின்றும் கரையேறித் திருவருள் பெற்ற கரையெற விட்ட குப்பமும், திருப்பாதிரிப்புலியூரும், கடலும் கிழக்கேயும் உள்ளன. தில்லைச் சிதம்பரம் தெற்கே உள்ளது. இந்த நான்கு எல்லைகட்கு உட்பட்ட நன்னகரமாய் என்றும் குன்றுப் பெருமையுடையது திருவகீந்திரபுரம் என்ற நன்னகரம்.

## கோயிற் சிறப்பு

இது வைணவக் கோயிலானும் தனிச் சிறப்புடையது. பிரமனும், விஷ்ணுவும், சிவனும் ஒருவராய்க் காட்சியளிக்கும் திருவுருவம் அமைந்துள்ளது. நின்ற திருக்கோலமாய் சூலமும், தாமரையும் சங்கும் தாங்கி, மூவராயமூர்த்தியாய் திருமால் காட்சியளிக்கிறார். சூலம் சிவனையும், சங்கம் திருமாலையும், தாமரை பிரமனையும் குறிக்கும் அடையாளங்களாக அமைந்தன.

திருக்கோயிலின் கர்ப்பக் கிரகம் என்ற உட்கோயிலானது, தென்புறம், தக்ஷிணாமூர்த்தியின் திருக்கோலத்தையும் பின்புறம் திருமாலினையும், வடபுறம் பிரமனையும் கொண்டு

நல்ல காட்சியளிக்கிறது. உட்பிரகாரத்திலேயே, விநாயகருடைய திருவுருவம் வைத்து வழிபடப்பட்டு சமய வேற்றுமை களைந்து காணப்படுகிறது. சிவக்ஷேத்திரத்திற்கே உரிமையான வில்வமரம் என்றும் காட்சியளிக்கும் பெருமையுடையது.

ஸ்ரீமந் நாராயணன் ஹயக்கிரீவனாய், பரமாசாரியனாய் மார்க்கண்டேயருக்கு அருளுபதேசம் செய்ததாக விளங்கும் காட்சியும் உடையது இக்கோயில். அதனாலேயே, அந்தமலை, ஹயக்கிரீவ மலை என்ற பெயரும் உடையதாய், மலைமேல் கோயிலும், வழிபாடும் நடந்து வருவதை யறியலாம். சித்திரைப்பௌர்ணமியில், பெருமாளுக்குப் பிரம்மோத்சவமும் நடக்கும் பெருமையுடையது. தேசிகருடைய சந்நிதானம், மிகச் சிறப்புடையதாய் வைணவர்கட்கே பெருமையளிக்கும் இத் திருவகீந்திரபுரம்.

## குடிச் சிறப்பு

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவகீந்திரபுரம் திருப்பாதிரிப்புலியூர் என்னும் உயர்ந்த திருப்பதிக்கு மேற்கே மூன்றுகல் தொலைவில் உள்ளது. கெடில நதிக்கரையில் இருக்கிறது. நாற்புறமும் சோலை சூழ்ந்தது. நல்ல நிலவளமும், நீர்வளமும் உடையது. மலையடிவாரம் ஆகையால்நல்ல காற்றும், வாழ்க்கை வசதியும் உடையது. சுற்றுப் புறங்கள் அத்தனையும், நல்ல குடிவளமும், வயல்வளமும் உடையது. ஆகையால், பரம்பரையாகவே நல்ல குடிமக்கள் ஆங்கு வசித்து வரலாயினர். வேதாந்த தேசிகர், திருநாவுக்கரசர், சிங்காதனாதிபதிகள்,தொல்காப்பியதேவர், சிதம்பரமுனிவர் முதலிய பெரும்புலவர்களும், பெரியோர்களும், அங்கே வசித்து வந்தனர். அவர்கள் வாழ்க்கைக்கும், வழிபாட்டுக்கும், சிவக்ஷேத்திரங்களும்,வைணவத்திருப்பதிகளும் காரணமாயிருந்தன. ஆதலால், திருவகீந்திரபுரத்திலும், பலவைணவக் குடும்பங்கள் நல்ல முறையில் வாழ்ந்து வந்தன. வடகலை

வைணவர்களாகிய அந்தணர்கள் ஆங்கே பலர் வடமொழி யாகிய ஸம்ஸ்கிருதத்தில் பாண்டித்யம் உடையவர்களாய் வாழ்ந்து வந்தனர்.

## தந்தையார் - தாயார்

திருமாலடி பேணும் வைணவர்களில் வேதத்தையும் பாஞ்சராத்திர ஆகமத்தையும், முதன்மையாகக் கொண்டு, நாலாயிர திவ்வியப்பிரபந்தங்களைத் துணையாகக்கொண்டு வழிபாடு செய்வோர் வடகலை வைணவர் எனப்படுவர். அந்தப் பாரம்பரிய வம்சத்தில், ஸ்ரீவத்சகோத்திரம் மிகவும் சிறந்த குடியாகும். அந்த ஸ்ரீவத்சகோத்திரம், வடமொழி யிலும் வேதத்திலும், தமிழிலும், ஆசாரிய பரம்பரை ஸ்ரீசூக்த முதலியவற்றிலும் கற்றுத்துறை போகிய நற்றவப் பெருமக்களையுடையது. அந்தக்கோத்திரத்தில் ஸ்ரீவேதாந்த சாரியார் என்ற ஒரு பெரியார் வாழ்ந்தார். அவர் சிறந்த ஸம்ஸ்கிருத பாண்டித்தியம் உடையவர். நல்ல ஒழுக்கமும் விஷ்ணு பக்தியும் கொண்டவர். யாவரையும் நேசிக்கும் அன்பும் இரக்கமுங்கொண்டவர். வெறும் ஆடம்பர வாழ்க்கையுடையவர் அலலர். இளமை முதற்கொண்டே நல் வாழ்க்கை நடத்திப் பெற்றோரின் மனமுவப்ப நடந்ததால், அவர்களது வேண்டுதலுக்கு இணங்க, நல்ல குடிப்பண்பும், பெண்மைக்கு அமைந்த நாற்குணங்களும் நிறைந்த மனைத் தக்க மாண்புடையளான, நற்றவ நங்கை ரங்க நாயகி என்ற அருமருந்தன்ன பெண்ணை மணந்து இல்லறமென்னும் நல்லறத்தை ஸ்ரீவேதாந்த தேசிகர் மேற்கொண்டார். இவ்விருவரும் ஒரு வண்டியிற் பூட்டிய இரு எருதுகள் போலவும், ஒராவிற்குத் தோன்றிய இரண்டு கொம்புகள் ஒத்திருப்பது போலவும், இரண்டு கண்களும் ஒரு பொருளையே காணுவது போலவும் : கருத்து ஒருமித்து வாழ்ந்து வந்தனர்.

## பெற்ருேர் வாழ்க்கை

பெற்ருேர்களாகிய வேதாந்தரசாரியாரும், ரங்க நாயகி அம்மையாரும், இல்லறமென்னும் நல்லறத்தில், அடியார் களைப் பேணுதலிலும், ஆவுதியருத்தலிலும், விருந்தினரைப் போற்றுதலிலும் ஏழைக்கு உதவுதலிலும் கண்ணும் கருத்து மாய் வாழ்ந்து வந்தனர். நம்முடையநாட்டில் வாழ்ந்தபெரி யோர்கள் கடமையைச் செய்வதில் கருத்துடையவர்கள். இல்லறம்செம்மையாகநடந்து வரும்போது இல்லறப்பயனும் மனைக்கு அணிகலமாய் நன்மகப்பேறுகருதிஅப்பெற்ருேர்கள் திருமாலினை நாடோறும் வணங்கி வழிபட்டு வந்தார்கள்.

## மக்கட் சிறப்பு

செல்வமும் சிறப்பும் எவ்வளவுதானிருந்தாலும் நன் மகப்பேறு இல்லை என்ருல அவ்வில்லறம் நல்லறமாகா தன்ருே! திருவள்ளுவரும்கூட,

"பெருமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற"

என்று கூறிஞரே.

பொன்னுடையரேனும் புகழுடையரேனும் மற்று
என்னுடையரேனும் உடையரோ -இன்னடிசில்

புக்களையும் தாமரைக் கைப்பூ நாறும் செய்யவாய்
மக்களை இங்கிலாதவர் -நளவெண்பா

என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். ஆதலால் நம் வேதாந்தா சாரியாரும், ரங்கநாயகி அம்மையாரும் தங் கட்கு நல்ல மகன் பிறந்து உலகுக்குப் பயன்பட வேண்டும் என்று வேண்டித் தவமிருந்தனர்.

## நல்லோர் சிறப்பு

ஒரு நாட்டுக்கும், ஒரு ஊருக்கும் சிறப்பு உண்டாவது அந்த நாட்டில் பிறக்கும் நல்லவர்களாலேதான். எந்த நாட்டில் நல்லவர்கள் பிறக்கிருர்களோ. எந்த ஊரில் பெரியோர் தோன்றுகிருர்களோ, அந்த நாடும், ஊரும் பிற்காலத்தில் நல்ல நாடாகவும் ஊராகவும் போற்றப்படுவதையும் அவை உயர்ந்த க்ஷேத்திரங்களாக ஆகிவிடுவதையும் நாமறிவோம். அதேபோல, பெற்ரோர்களின் நற்றவப்பயனுல், **திருவகீந்திரபுரம்** என்னும் அந்த நல்ல ஊரிலே, அவர்களுடைய நல்லொழுக்க நல்லறத்திற்கேற்ப, அரங்கநாயகி அம்மையார் வயிற்றில் ஒரு நன் மகவு கருக்கொண்டது.

## பிள்ளைப் பேறு

அந்தக் கரு, நல்ல நினைவுகளாலும், நல்லறச் செயல்களாலும் நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்ந்து வந்து கலியுகாதி 4962க்கு ஆங்கில ஆண்டு 1862-ம் ஆண்டு, துன்மதி ஆண்டு, பங்குனி மாதம் 18-ம் தேதி சனிக்கிழமை, சதுர்த்தசி திதி பூரட்டாதி நட்சத்திரம் பகலவன் உதயம் காலை 4-30 மணிக்கு மேஷ லக்னத்தில் ஆடவம் என்னும் இருட்டறையில் அகப்பட்டு, இருவினை என்னும் கயிற்ருல் கட்டப்பட்டு, இன்ப துன்பச் சேறுகளில் இடர்பட்டு, அறிவுக்கண்கொண்டு காணமுடியாது தவிக்கும் ஆன்மகோடிகள் எல்லாம் உய்ய அடியார் குழுக்கள் ஆனந்தமடைய, நாத்திகம் தொலைய ஆத்திகம் வளர, அன்பு மலர அறம் ஓங்க அரங்கநாயகித் தாயார் திருஉதிரத்தில் நம் குருமூர்த்திகளாகிய **ஸ்ரீ நந்தியடிகள்** தோன்றியருளினுர்கள்.

"நாடு ஆகு ஒன்ருே காடு ஆகு ஒன்ருே
அவலாகு ஒன்ருே மிசையாகு ஒன்ருே
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்று சங்கச் சான்ருேர் கூறியபடி, எல்லா உயிர்கட்கும் இன்பமே கருதும் நல்லாராகிய நம் அடிகள் பிறந்த அந்த ஊர் நல்ல ஊராக அன்று முதல் காட்சியளிக்கிறது. அவரை பெற்றெடுத்த தாயாரும்தந்தையரும் அளவில்லா தமகிழ்ச்சி யடைந்தார்கள். பிணியினுல் வருந்தும் நோயாளன் அந் நோய்க்கு மருந்து கண்டாற் போலவும், பசியால் மெலியும் ஏழை ஒருவன் அறுவகைச் சுவையோடு கூடிய அமுதம் கிடைத்தது போலவும். வறுமையால் வருந்தும் மிடியன் பொக்கிஷப் புதையலைப் பெற்ருர் போலவும், ஆன்ம லாபம் பெறக் கருதும், மாணவனுக்கு, ஞான ஆசான் எதிர்ப்பட்டாற் போலவும். பெற்ருேர்கள் தாம்பெற்ற மகவைக்கண்டு பரமானந்தம் அடைந்தார்கள். அன்று முதல். தாயும் தந்தையுமாகிய இருவரும் கண்பெற்ற குருடனைப் போலக் கரையிலா இன்பமடைந்து, கண்ணும் கருத்துமாகப் பிள்ளையை நோயின்றியும், குறையின்றியும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வரலாயினர்.

அடிகளார், இளங்குழந்தையாய். அடியார் படுந் துயரைக் கண்டு அழுவதுபோன்று அழுதும், தவழ்ந்தும், குப்புற்றும், உட்கார்ந்தும், அசைந்தாடியும், இசை கேட்டுத் துயின்றும், தளர்நடை பழகியும், தாய் தந்தையர்க்கு எச்சிலெனும் அமுதூறமுத்தங்கொடுத்தும், குழலினும் யாழினும் இனிய மதலைச்சொல் பயின்றும். கொஞ்சும் சதங்கைகட்டிக் குலாவி விளையாடியும், கண்ணுக்கு மைப்பூசி, குஞ்சிக்கு மலரிட்டு, அரைக்கு அரை நாணணிந்து, அன்பினுல் கட்டியணைக்கும், அன்னை தந்தையர்க்கு, உணர்ச்சியுண்டாக்கி,

" மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
செயற்கேட்டல் இன்பம் செவிக்கு "

என்ற வள்ளுவர் வாக்குப்படி, இளம்பருவ விளையாட்டுகள் அனைத்திலும், பெற்ருேர்க்கும், மற்ருேர்க்கும் எண்ணிலா இன்பத்தை யளித்து வளர்ந்தார்.

# இளம் பருவம்

இளம் பருவத்திலேயே குழந்தைகட்கு நல்லபழக்கங்கள் உண்டாக வேண்டும். மீன் குஞ்சு நீந்தப் பழகுவது போல், இளமைப் பருவத்தில் பெற்றோர்கள் என்ன என்ன செய்கிறார்களோ, அதனையே குழந்தைகளும்செய்யவும்பழகவும் ஆசைப்படும். அடிகளாருடைய பெற்றோரான வேதாந்தாசாரியார் வேதாத்தியயனமும், திருமால் வழிபாடும், நல்லோர் வணக்கமும், கல்வி கேள்விகளில் ஆதுரமும் உடையவர்களாய் நல்லொழுக்க சீலர்களாய் விளங்கினமையாலும், தாயார், நாயகனுக்கு ஏற்ற நன்மனையாளாய் கற்பின் கொழுந்தாய், நல்ல தாயாய் விளங்கினமையாலும் நம் அடிகளார்க்கும் இளமையிலேயே நல்ல பழக்கங்களும், கல்வியில் ஆர்வமும் அடியார்களிடம் பற்றும் தெய்வ நம்பிக்கையும் பணிவும் இயல்பாகவே உண்டாயின. அடிகளாரின் இளம்பருவத்தில் தாயார் இன்னமுது தீஞ்சுவையோடு இன் சொல்லும், அன்புக்கனிவும், இரக்க உள்ளமும், ஊட்டி வளர்த்து விட்டார்கள். தாயின் கருணை உள்ளம் அடிகளாரையும் கருணையுள்ளம் உடையவர்களாக ஆக்கிவிட்டது. தந்தையாராகிய வேதாந்தாச்சாரியார், சிறந்த வடமொழி விற்பன்னர். ஆகையால், நம்மடிகளாகிய குழந்தையை இளமையிலேயே, வேத அத்தியயனத்தில் பழக்கி விட்டார்கள் அன்றியும், கல்வியில் ஆர்வத்தையும் உண்டாக்கி விட்டார்கள்.

''தந்தை மகற்கு ஆற்றும்நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்''

என்ற பெரியோர் வாக்கின்படி. கல்விநிலை பெறுதற்குரிய ஐந்தாண்டு நிறைவுபெற்றவுடன், கலைக்கூடமாகிய பள்ளியில் வைப்பதற்குமுன் செய்யவேண்டிய சௌளம், உபநயனம், முதலிய சடங்குகளை, வேத விதிப்படியும், தங்கள் குல ஆசாரப்படியும் குறைவற முடித்து, கல்விச்சாலைக்கு அனுப்ப ஏற்பாடு செய்தார்கள்.

## கல்விப் பயிற்சி

திருவகீந்திரபுரத்தில் கல்விச் சாலை யின்மையாலும் மேலே கல்வி பயிலுதற்கு வேண்டிய வசதி, அந்தச்சிற்றூரில் வாய்க்கப்பெறுமையாலும், அடிகளை இரண்டு இரண்டரை மைல் அண்மையில் உள்ள திருப்பாதிரிப்புலியூரில் உள்ள ஒரு ஆங்கிலப் பாடசாலையில் கல்வி பயில வைத்தார்கள். அடிகளுக்குக் கல்வியில் ஆவல் அதிகமாகையால். எல்லாத்துறையிலும் மிகமிக விரைவாகக் கல்வி பயின்று வரும்போதே அடிகளாருடைய உள்ளம் மாத்திரம் தனியாக இறைவனைச் சிந்திப்பதிலும், அதனை வழிபடும் முறையிலும் மேலும் மேலும் சென்று கொண்டே இருந்தது. வேதாந்த ரகசியங்களிலும், சித்தர் நூல்களிலும், அடிக்கடி மனம் சென்று, அதனைப்பாடும், படிக்கும், அடியார்களை நாடுவதிலும் அதில் வரும் சந்தேகங்களை நீக்கிக் கொள்வதிலுமே, பெரும் பொழுது போக்க வேண்டும் என்ற அவா அடிக்கடி அடிகளுக்கு உண்டாகும்.

## ஆசிரியர்களும் தொடர்பும்

இளமைப் பருவத்தில், பெற்ரேரால் நம் அடிகட்கு இட்ட திருநாமம் சீநிவாசன் என்பதாம். அவர் திருப்பாதிரிப்புலியூரில் கல்வி பயிலும் காலத்தில் மஞ்சக்குப்பம் என்ற தென்னுற்காடு ஜில்லாவின் தலைநகரத்தில் ஆங்கில உயர்நிலைப்பள்ளி ஒன்றுஇருந்தது. அதனுடையதொடர்பில் தான் திருப்பாதிரிப்புலியூரில் ஒரு பாடசாலை இருந்தது. மஞ்சக்குப்பத்தில் திரு. சாமிநாத ஐயர் என்பவரும், திருப்பாதிரிப்புலியூரில் சிவசிதம்பர முதலியார் என்பவரும் தமிழ்ப்புலவராய் விளங்கினுர்கள். திரு. சிவசிதம்பர முதலியார் சிறந்த தமிழ்ப்புலவர். திருவாடுதுறை மாதவச் சிவஞான யோகிகளிடம் பாடம் கற்ற பெருமையுடையவர். சைவ பரம்பரைக் குடும்பத்தைச் சேர்ந்தவர். இலக்கிய இலக்கணம் வல்லவர். சாத்திரங்களில் பயிற்சியுடையவர்

தெய்வபக்தியும் சிவ பூஜையும் உடையவர். அவர்களைக் கண்டாலே எல்லோர்க்கும் ஒரு தனியான மரியாதை உண்டாகும். நம் அடிகளார்க்கு இளமையில் உண்டாகும், அநேக சந்தேகங்களையும், சித்தர் நூல் தமிழ் நூல்களில் வரும் ஐயப்பாடுகளையும் சிவ சிதம்பர முதலியார் என்ற தமிழ்ப் புலவரிடமே கேட்டுத் தெளிவதுண்டு.

## ஒரு சாலை மாணவர்

நம் அடிகள் இளமையில் கல்வி பயிலும் போது, ஒரு சாலை மாணவர்கள், உடன் பயின்றவர்களில் பலர் பெரிய பெரிய நிலை எய்தினவர் உண்டு. திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர், ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்று தமிழ்நர்டு முழுவதும், சொற்பொழிவினலும் சமயத் தொண்டினலும், பெரும்புகழ் படைத்து விளங்கின மறைத்திரு ஞானியார் அடிகள் நம் அடிகளர்ரின் ஒரு சாலை மாணவர்ஆவார்கள்.

## ஒரு நாளைய நிகழ்ச்சி

அடிக்கடி ஸ்ரீ சிவ சிதம்பர முதலியாரிடம் தமக்குற்ற ஐயங்களைக் கேட்டுப்பழகி வரும்போது ஒருநாள் திரு முதலியார் அவர்கள் சிவபூஜை செய்து, சாத்திர தோத்திரங்களை முடித்துக்கொண்டு, சர்த்திர விசாரணைக்காக திண்ணையில் உட்கார்ந்திருக்கிறுர்கள். அடிகளும் அங்கே உட்கார்ந்திருக்கும்போது காற்றினல் அடிபட்டுவந்தோ அல்லது அங்கேயே கீழே கிடந்தோ திருவருள் வ்சத்தால் அசரீரி கொடுத்தது போல, ஒரு ஓலைச் சீட்டுத் துண்டு ஒன்று அடிகள் கையில் கிடைத்தது. அந்த ஓலைச் சீட்டைப் படித்ததில் அங்கே அடுத்து' வரும் பாட்டு காணப்பட்டது.

''ஆறு அமுதே அயில்வேல் அரசே
ஞான கரனே நவிலப்படுமோ
யானாகிய என்னை விழுங்கி வெறுந்
தானாகி நின்றது தற்பரமே''

## முன் நினைவு

இந்தப்பாட்டைக்கண்டவுடன் சுவாமிகளுக்குச் சென்ற நாள் இரவில் கண்ட கனவின் நினைவு வந்தது. வேதங்களிற் கூறப்படும் சிறந்தபொருளை ஐயமறத்தெளிய இது உதவுமா என்ற எண்ணம் அடிக்கடி சுவாமிகளுக்கு வருவதுண்டு, இந்தப்பாட்டும் முந்தினநாள் இரவு கண்ட கனவும் ஒத்திருப்பதை மனதிற்கொண்டு உடனே சீட்டிற் கண்ட கவியையும் தமிழ்ப்புலவர் திரு. சிவசிதம்பர முதலியார் அவாகளிடம்சுவாமிகள் காட்டி, கனவையும் கூறினார்கள், இளைஞரான அடிகளின் அனுபவங்களைக்கேட்ட ஆசிரியரும் புலவருமாகிய முதலியார் அவர்கள் வியப்படைந்து, அவர்களுடையபக்குவ நிலையை உணர்ந்து அவாகளை நந்தியருள்நூல் கூறும் புதுவை, ஸ்ரீ முருகப்ப ஆசாரியார் அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள்.

## அடிகள் நிலை

இந்த நிலை அடிகட்கு உண்டாகும் காலம் பதினெட்டு வயது இருக்கலாம். நல்ல இளமைப்பருவம், ஐந்தாவது படிவம் (Fifth form) வரை ஆங்கிலம் கற்ற கல்வியும், உலகியல் அறிவும் உடையவர்களாய் யாரிடமும் நயமாகப் பழகும் பண்பும் உடையவர்களாய் வாழ்ந்து வந்தார்கள். குலத்துக்கு ஏற்ற குணமும் சீலமும் உடைய வேங்கடத்தம்மாள் என்ற இளநங்கையை மணந்து இல்லற வாசியாகவே வாழ்ந்தார்கள். இல்லறம் ஒருவனைத் தீய வழியிலும், குடும்பச் சேற்றிலுந் தள்ளிவிடுவதில்லை. அவன் மனம் செல்லும் வழிக்குத் துணைசெய்யுமே யன்றி அவனைப் பாழ்படுத்தாது என்பது அடிகளாரின் வாக்கையே எடுத்துக்காட்டுகிறது.

## முருகப்ப ஆசாரியாரின் வரலாறு

முருகப்ப ஆசாரியார் என்பவர் 20 அல்லது 21 வ்யதுடைய இளைஞர : பெற்றோரிடமும் மனம் மாறுபட்டு ஊரை விட்டுப் புறப்பட்டு, க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்து கொண்டு போகும்போது சீர்காழி என்னும் திருப்பதியை வணங்கிப் பக்கத்து கிராமத்திற்குச் சென்றார். அங்கே ஒரு நல்ல வைதீக குடும்பம் இருந்தது. அந்தக் குடும்பத்து அந்தணர் வீடு நெருங்கும்போது முருகப்ப ஆசாரிக்கு அளவிட முடியாத களைப்பு உண்டாய் விட்டது. அதனால் தாகத்தைப் போக்கிக் கொள்ளத் தண்ணீர் அந்த வீட்டில் கேட்டார் ஆசாரியார். உடனே அந்தணர் அன்போடு தண்ணீச் கொடுத்து உபசரித்ததோடு நில்லாமல், முருகப்ப ஆசாரியாரை வீட்டின் தோட்டத்தில் உள்ள கேணியில் குளிக்கும் படிச் சொல்லி வேண்டிய உபசாரமும் செய்து, அந்த முருகப்ப ஆசாரியாரைத் தம்முடைய பூசை அறைக்கு உள்ளே அழைத்துச் சென்றார். திருநீறு கொடுத்து பூசச் செய்து அந்த அந்தணர் தம் அருகில் அமரச்செய்தார். உட்கார்ந்த உடனே, அன்றிரவு தான் கண்ட கனவினை அப்படியே அந்தணர் ஆசாரியாரிடம் கூறினார்.

### கனவு நிலை

''நாளைய காலையில் 20 வயதுடைய இப்படிப்பட்ட அடையாளங்களோடு கூடிய ஒரு இளைஞர் வருவார். அவர் யாத்திரை வாசி. அவர் பெயர் முருகப்ப ஆசாரி. அவரிடம் உன்னிடம் உள்ள ஸ்ரீ சிவாசம்சநாடி என்னும் ஸ்ரீநந்தியருள் நூலை, ஆசார முறைப்படி, மந்திர உபதேசத்தோடு உபதேசிக்க வேண்டும்'' என்றும், நந்தி எம்பெருமான் கட்டளை என்று கனவில் கண்டதை அப்படியே கூறினார். அதைக் கேட்ட ஆசாரியார் கொஞ்சம் பிரமிப்படைந்து, பின் தெளிந்து திருவருளால் நிகழ்வது என்று கொண்டு அந்தணரிடம் ஒப்புக்கொண்டார். அதன்படியே அந்தணர் நந்தி

யெம்மடிகட்கு பூசை ஆராதனை முடித்து ஆசாரியாருக்கு ஸ்ரீ நந்தியருள் நூலை மந்திர சாஸ்திரங்களோடு உபதேசம் செய்தார்.

## ஆசாரியார் புதுவைக்கு வருதல்

இவ்வாறு உபதேசம் பெற்ற ஆசாரியார் மூன்று நாள் அங்குத் தங்கிப் பின் அந்த சிவாம்ச நாடி என்ற அருள் நூல் உபதேசத்தோடு யாத்திரையை முடித்துக் கொண்டு, திரும்பித் தன் சொந்த ஊராகிய புதுவைக்கு அடுத்த கரிய மாணிக்கம் என்ற ஊரில் தங்கி, அருள் நூலில் கண்ட உண்மையான ஞான ஆராய்ச்சிப்படியும் அநுட்டான முறைப் படியும் நடந்து வந்தார. ஆனால் அவர் எவ்வளவு தரன் அடங்கி நடந்தாலும் அவரிடம் உள்ள உயர்ந்த பண்புகளும் அந்த நூலில் காணும் சோதிட விசேஷங்களும், பிற செய்திகளும், சொன்னது சொன்னபடியே நடத்தலால், யாவரையும் தன் வசப்படுத்தி விட்டது.

## நந்தியருள் நூலின் தன்மை

ஸ்ரீ சிவாம்ச நாடியென்னும் நந்தியருள் நூலானது ஞான ரகசியங்களையும், ஆகம உபநிஷத உண்மைகளையும், சித்த நூலின் உண்மைகளையும் கூறி மனிதன் அடைய வேண்டிய வீட்டு நிலையையும் கூறுவது. ஆனால் இகலோகத்தில் வாழ வேண்டிய சோதிடம், மருத்துவம் முதலிய சிறந்த உண்மைகளையும் கூறி மக்களிடம் அருள் உள்ளத்தை யுண்டாக்கும் உபதேச நூலாகும். அந்த நூல் தேவாம் சமுடைய அருள் பெற்றவர்களிடம் தான் கிட்டும். அது மாயமான தன்மையுடையதாய், ஆசாரிய பரம்பரையாய் அடையக் கூடியதாய் உள்ளது.

## ஆசாரியார் வாழ்க்கை

முருகப்ப ஆசாரி அதனைப் பெற்றதிலிருந்து சிறந்த தவ வொழுக்கமும், கடவுள் வழிபாடும், நந்தி யெம்பெருமான்

பூசையும் உடையவராய் தன்னிடம் வருபவர்கட்கு, சோதிடம், மருத்துவம், அறமொழி, அருளுபதேசம் இவைகளை அவர் அவர் பக்குவத்திற்கேற்பச் செய்து சீரும் சிறப்புமாகப் படாடோபம் இல்லாமல் கரியமாணிக்கத்திலேயே வாழ்ந்து வந்தார். ஆனல் எவ்வளவு அடக்கமாக இருந்தாலும், அவருடைய பெருமையும், தகுதியும் மக்களுக்குத் தெரிந்துவிட்டது. அப்படியே பரவி, புதுச்சேரிக்கும் புகழ் எட்டி விட்டது.

## நாடு ஷண்முக முதலியார்

புதுச்சேரி, பிரஞ்சுக்காரர்களுக்கு இந்தியாவிலுள்ள பல இடங்களுக்குத் தலை நகரமானது : அங்கே தான் பிரஞ்சிந்தியாவின் ராஜப் பிரதிநிதியும், சட்டசபையினரும் இருப்பாகள். அப்போது நாடு ஷண்முக முதலியார் என்பவர் பிரஞ்சிந்தியாவில் மிகவும் புகழ் பெற்றவர். பிரஞ்சு ராஜப் பிரதிநிதிக்கு சமமான பெருமையுடையவர். மக்கள் கட்சித் தலைவர். அரசாங்கப் பொறுப்பு வகிப்பவர். அவருக்கும் சமமான அரசாங்க செல்வாக்குடையவர். அதற்கு முன்னும் இல்லை பின்னும் இல்லை என்று கூறலாம். அந்த நாடு ஷண்முக முதலியாருக்குச் சோதிடத்தில் நம்பிக்கையுண்டு. முருகப்ப ஆசாரியாா சோதிடத்தில் கூறுவது, அப்படியே நடப்பதாகவும், பொறுத்தமாகவும் இருப்பதாக முதலியார் அறிந்து முருகப்ப ஆசாரியாரைச் சந்திக்கக் கரியமாணிக்கம் வந்தார்.

## ஆச்சாரியார் புதுவைக்கு வந்தது

நாடு ஷண்முக வேலாயுத முதலியார், அரசாங்க உத்தியோகஸ்தர் புடை சூழ கரியமாணிக்கம் வந்து ஆசாரியார் வீட்டிற்கு முன், சாரட்டு குதிரை வண்டியில், ஊர்மக்களெல்லாம் திரண்டு வேடிக்கை பாாக்க இறங்கினவுடன் ஆசாரியாருக்கு ஒருவிதமான வியப்பும், அதிர்ச்சியும் உண்

டாய் விட்டது. அந்தப் பெரிய மனிதர் வருவார் என்று ஆசாரியார் நினைக்கவே இல்லை. உடனே எழுந்து மரியாதை செய்து, உட்கார வைத்து வந்தகாரணம் என்ன என்று வினவினர். முதலியாரும், தலைக்குச் சோதிடத்திலுள்ள சந்தேகங்களைக் கூறினர். ஆசாரியார் ஸ்ரீ நந்தியருள் நூலின் துணைகொண்டு, அவருடைய சந்தேகங்களைப் போக்கி மேல் நிகழும் செயல்களையும் எடுத்துச் சொன்னா. கேட்ட முதலியாருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகி, ஆசாரியாரை ''தாங்கள் இங்குக் கரியமாணிக்கத்தில் இருக்கக்கூடாது. புதுவைக்கு வந்துவிட வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார் முதலியாரின் விருப்பப்படியே ஆசாரியாரும் புதுவைக்குச் சென்று தங்கி அங்கேயும் தன் துறையில் சோதிட, மருத்துவ உபதேசங்களைப் பக்குவப்படி சொல்லி வந்தார். அந்த நாடு ஷண்முக முதலியார் அவர்களும், அதுமுதல் ஆசாரியார் வீட்டுக்கு அடிக்கடி வந்து போவதும், சந்தேகங்களைப் போக்கிக்கொள்வதுமாக வர்ழ்ந்து வந்தார்.

## ஆசாரியாரிடம் அருள் நூலில் ஈடுபட்டவர்கள்

ஆசாரியாருக்குப் புகழும் பெருமையும் உண்டர்வதற்கும், அவ்ர் செர்ன்னபடியே சோதிடம் பலிப்பதற்கும் அவரிடம் அநேகர் அருளுபதேசம் பெறுவதற்கும் காரணமர்யிருப்பது ஸ்ரீ தெய்வாம்ச நூலாகிய நந்தியருள் நூல்தான் என்பது சிறிது சிறிதாக வெளிப்பட்டது. அதனல், புதுவைக்கு அடுத்த பல இடங்களிலிருந்தும், புதுவையிலிருந்தும் பலப்பல வித்வான்களும், செல்வந்தர்களும், உத்தியோகஸ்தர்களும், பெரிய மனிதர்களும், அடிக்கடி ஆசாரியாரைப் பார்க்கவும், சத்விஷயங்களைக்கேட்கவும், வருவதும் போவதுமாக இருந்தார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் திருப்பாதிரிப்புலியூரில் தமிழ்ப்புலவர் திரு. சிவசிதம்பர முதலியார் அவர்கள், ஆலப்பாக்கம் தமிழ்ப்புலவர் தெய்வசிகாமணிப் பிள்ளை யவர்கள், திருவகீந்திரபுரம் ரங்கசாமிப்

பிள்ளையவர்சள், உள்ளேரிப்பட்டு சுப்பா ரெட்டியாரவர்கள் வேளாளன் குப்பம் சிவபெருமா ஆசாரியாரவர்கள், பாம்பன் ஞானவீரம் பிள்ளையவர்கள், இவர்கள் எல்லோரும் முருகப்ப ஆசாரியாரிடம் உள்ள நந்தியருள் நூலில் மிகுந்த பற்றுட ஸ்ரீ நந்தியடிகளின் அருளும் பெற்றவர் ஆவார்கள். இவர் களுள் திரு ஞானவீரம் பிள்ளையவர்களைப்பற்றி சில குறிப்பு கள் தரவேண்டும். ஸ்ரீ ஞானவீரம் பிள்ளை ஒரு கிருத்துவ மதத்தைச் சேர்ந்தவா. ஆங்கிலக் கல்வியுடையவர். பாம்பன் முதலிய இடங்களில் டெலிகிராப் உத்தியோகம் வகித்தார் இப்படியிருந்தும், ஸ்ரீ நந்தியடிகளிடம் அவரும் பிறரும் அவர்கள் வாழ்நாள் முழுதும் பக்திசெலுத்தி முக்தியடை தார். மேலே குறிப்பிட்ட அத்தனை பேரும் முருகப்ப ஆசாரி யாரிடம் நந்தியடிகளின் அருளைப் பெற்றவர்களே. அவர் களுள் ஒருவர்தான் நம் அடிகளாரை அழைத்துச் சென்ற திருப்பாதிரிப்புலியூர் புலவர் சிவ சிதம்பர முதலியார் ஆவார்கள்.

## திருவருளின் முன் குறிப்பு

புலவர் சிவசிதம்பர முதலியாருடன் நம் சீனிவாசன் என்ற சிறு வயதுடைய அடிகள் செல்லும்போது வயது பதினெட்டு இருக்கலாம். அவாகள் ஆசாரியாரிடம் போகும் போது மேலே குறிப்பிட்ட " ஆறு அமுதே அயில்வேல் அரசே " என்ற கந்தர் அநுபூதிச் செய்யுள் எழுதிய சிட்டையும், சித்தர் பாடல்களில் அநேக சந்தேகங் களையும் உடன் கொண்டு சென்றூர்கள். செல்வதற்கு முன்னைய நாள் இரவில், ஆசாரியாருடைய நந்தியடிகள வர்க்கு இந்த நாளில், இந்தப் பெயருடைய இளைஞர் ஒருவர் இப்படிப்பட்ட ஐயங்களோடு வரப்போகிறுர் என்று அருள் மொழிகள் உண்டாயின. அப்படியே நம் அடிகளாரும் சிவசிதம்பர முதலியாரும் ஆசாரியாரிடம் சென்றதும் அருள் வாக்கினையெடுத்துக் காட்டி முருகப்ப ஆசாரியார் அளவிட முடியாத ஆநந்தம் அடைந்தார்.

## அடிகட்கு உண்டான பற்று

அன்றுமுதல் தன்னுடைய வாழ்க்கையில் ஒரு புது மலர்ச்சியும், ஐயநிவர்த்தியும் அடிகட்கு உண்டாயிற்று; நந்தியடிகளிடம் அளவிலாத பக்தியும் அந்த அருள் வாக்கிலேயே எப்போதும் தியானமும், வாழ்க்கையில் ஒருவித மான முன்னேற்றமும் உண்டாய் விட்டது. அடிக்கடி புதுவைக்குப் போவதும், அருளுபதேசங்களில் கலந்து கொள்வதும், அங்கேயே சில நாள் தங்கி விடுவதுமாக வாழ்ந்து வந்தார்கள். காந்தத்தைக் கண்ட இரும்பு தானுகவே இழுபடுவது போல, அருள் நூலில் நந்தியடிகள் வாக்கில்,சுவாமிகள் ஈடுபட்டுவிட்டார்கள். சிவாம்ச நூலில் ஈடுபாடு பெருகவே, சுவாமிகள் தான் மாத்திரமன்றித் தன்னேடு பழகுபவர்களையும் அதில் ஈடுபடச் செய்தார்கள். சுவாமிகளோடு ஒரு சாலை மாணவராய் இருந்தவர் திரு வீரராகவச் செட்டியார் என்பவர். அவர் ஆங்கிலத்தில் பி. ஏ. படித்தவர். சப்-ரிஜிஸ்ட்ரராக வேலை பார்த்தவர். அவரும்நம் அடிகள் மூலம் சிவாம்ச நூலை உபதேசம் பெற்று, நந்திகேஸ்வரருடைய திருவருளை யடைந்தார். இப்படியாகப் பல அன்பர்களை நந்திகேஸ்வரரின் உண்மைத் தொண்டர்களை உண்டாக்கினர்கள்.

## அருள் நூலின் பெருமை

சிவாம்ச நூலின் பெருமைகள் பல. அவற்றின் ஒன்றிரண்டு இங்குக் குறிப்பிடலாம். ஒருநாள் ஸ்ரீ வீரராகவச் செட்டியார், குடும்ப நிலையறிய சிவாம்ச நூலின் அருள் வாக்குப் பெற புதுவைக்கு வந்திருந்தார். அன்று நந்தியடிகளின் வாக்கு சில உண்மைகளை வெளியிட்டது. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் புஜண்ட முனிவர் வழிபாடு செய்த ஆலயம் ஒன்று மண்மூடி மறைந்திருப்பதாகவும், அது அந்த ஊரின் கீழ்த்திசையில் இருப்பதாகவும் அதனைப்

பரிசோதித்துக் காணும்படியும் ஆணைபிறந்தது. அப்படியே குறிப்பிட்ட இடத்தில் தோண்டிப் பார்க்க அந்த ஆலயம் கண்டுபிடிக்கப்பட்டது. பிறகு விக்ரகங்களும் கிடைத்தன. உடனே சுவாமிகளின் ஆணையின்படி கோவிலைப் புதுப்பித்து விக்ரகங்களைப் பிரதிஷ்டை செய்து வழிபாடுகளை ஏற்படுத்தி பெரிய சிவாலயமாக்கி, இன்றும் வழிபடுவதற்கான க்ஷேத்ரமாக அந்தக்கோயிலைப் புதுப்பிக்க நம் ஸ்ரீவீரராகவச் செட்டியார் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்கள். இப்படியே அருள் நூலில் சொல்லிய பலவிஷயங்களையும் செட்டியார் அப்படியே செய்து இல்லறத் துறவியாக வாழ்ந்து மேன்மையடைந்தார்.

## நூல்வழி

அருள் நூல் மக்களுக்கு இம்மையில் பெற வேண்டிய சுகபோகங்களைக் கூறும். அதே நேரத்தில் அவரவர்களுடைய பக்குவ நிலைக்கேற்ப ஆன்ம வழியில் செய்வதற்குரிய சன்மார்க்கத்தையும் உபதேசிக்கும். புதுவைக்கு முடிசூடா மன்னராக விளங்கிய நாடு ஷண்முக முதலியாருக்கும், அவரைப் போன்ற பெரிய மனிதர்கட்கும் அப்படியேதான் அருள் செய்து அந்த அருள் நூல் விளங்கிற்று. அந்த நூல் உபதேசிக்கும் போது, சாதி வேற்றுமை, சமய வேற்றுமை உயர்வு தாழ்வு இல்லாமல், அவரவர்களுடைய பக்குவ நிலைக்கு ஏற்பவே, உபதேசம் இருப்பதை யாவரும் அறிந்து அதன்படி ஒழுகிவந்தனர்.

## அடிகளார் நிலை

இப்பெரு நூலில் ஈடுபட்டு, நல்வழியில் நடந்து வந்தவர்களில், சுவாமிகள் தான் வயதால் இளமையுடையவர்கள். ஆனல் அருள் நூலானது சுவாமிகளுடைய பக்குவ நிலைக்கு ஏற்ப அவர்களுடைய ஐயங்களையும், அவர்களுடைய ஆன்மவழிக்கேற்ற உண்மைகளையும் உபதேசித்து வந்தது.

அந்த நூலின் தன்மை நந்தியெம்பெருமானுடைய திருவாக்காகவே இருந்ததேயன்றி நூலாக நினைக்க இடமில்லாதிருந்தது. அதனுல் அதனையடைவோர் நந்தியெங்குருவின் திருவருளை நேரே பெறுவதாகவே கருதினர். அதனுல் சுவாமிகள் சிவாம்ச நூலில் ஈடுபட்டுத் தன்னையும், தன் குடும்பத்தையும் மறந்து பலநாள் புதுவையிலேயே ஈடுபட்டு விடுவார்கள்.

## ஒரு நிகழ்ச்சி

இப்படியாக சுவாமிகள் இருக்கும் போது சுவாமிகள் சர்வே டிபார்ட்மெண்டில் ஒரு குமாஸ்தா வேலையில் இருந்தார்கள். குடும்ப வாழ்க்கையும் தொடர்ந்து நடந்து வந்தது. இல்லறத்தில் இரண்டு நன்மக்களையும் பெற்று நல்வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். அதனுல் பெற்ருேர்கட்கும் மற்றைய சுற்றத்தாருக்கும் சுவாமிகளுடைய போக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. வைணவ குடும்பத்தில் பிறந்து பிராமணனுக இருந்துஇப்படி அடிக்கடி புதுவைக்குச் சென்று, நந்திகேஸ்வரர் திருவருளுக்கு இப்படித் தொண்டு செய்வது அவர்கட்கு அருவருப்பாக இருந்ததனுல் இதனை எப்படியாவது தடுத்துவிட வேண்டும் என்று ஒரு முயற்சி செய்ய எண்ணினுர்கள். சுவாமிகள்புதுவைக்குச் சென்றிருக்கும்போது, பெற்ருேரும் சில சுற்றத்தாருமாக அங்கே போய் ஒரு கலகம் செய்து சுவாமிகளை அழைத்து வந்துவிடுவது என்று எண்ணி அவ்வாறே ஒருநாள் புதுவைக்குச்சென்ருர்கள். அப்போது ஒரு அரிய நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. அதாவது நாடு ஷண்முக முதலியார் முதலிய பெரியவர்கள் ஒன்ருகக் கூடியிருக்க நந்திகேஸ்வரருக்குப் பூசை நடந்து கொண்டிருந்தது. முருகப்ப ஆசாரி ஒருபுறமும் நம் சுவாமிகள் மற்ருெரு புறமுமாக இருக்க ஸ்ரீ நந்திகேஸ்வர அருள்வாக்கை உபதேசம் செய்து கொண்டிருந்தார்கள். அப்போது பச்சைக்காயாக பலநாள்

சென்று பழுக்கக்கூடிய ஒரு வாழைப் பழக்குலை ஒன்று வந்து அறையில் வைக்கப்பட்டிருந்தது. அக்குலை உடனே நறு மணம் வீசி எல்லோருக்கும் பயன்படக்கூடிய பூசைக்கு உரிய கனியாக மாறிவிட்டது. அருள் நூலின் திருவாக்குப் படி உடனே அறையைத் திறந்து பாாத்தால் குலை கனிந் திருந்தது. உடனே எடுத்துவந்து பூசை செய்து, அனைவர்க் கும் வழங்கப்பட்டது. இப்படியாக சுவாமிகள் நந்தியெம் பெருமான் சந்நிதியில் முதன்மை நிலை பெற்றிருப்பதையும் அங்கு நடக்கும் அற்புதச் செயல்களையும், சொற்பொழிவில் நிகழும் அறிய, ஆன்மா பயன்படும் நல்ல மார்க்கங்களையும் கண்டும், கேட்டும், பெற்றோர்க்கு பெருமகிழ்ச்சி உண்டாய் விட்டது. அதனால் அவர்கள் குழப்பம் செய்வதை விட்டுச் சுவாமிகட்கு வணக்கம் செய்து வந்துவிட்டார்கள். இப் படியே அதிதீவிரபக்குவசாலிகளாய் விளங்கிய திரு சிவசிதம் பர முதலியார்ர் தெய்வசிகாமணிப் பிள்ளை ஞானவீரம்பிள்ளை வீரராகவச் செட்டியார் இவர்கட்கும் சுவாமிகளிடம் அளவு க்டந்த பற்றும் உண்டாயிற்று. அவர்களும் சுவாமிகளிடம் அருள் பெற்று வந்தார்கள். இதுமுதல் சுவாமிகள் நந்தி யடிகள் என்று யாவராலும் அழைக்கப்பட்டார்கள். அந்தத் திருநர்மமே, கடைசி வரையிலும் நிலைத்து விட்டது.

## அலுவல் நீக்கம்

இந்த நிலையில் இருக்கும்போதே சுவாமிக்ள் சர்வே வேலையை விடாமல் இருந்தார்கள். ஆனால் நநதிகேசுவர ரின் திருவாக்கிணைப்படி வேலையையும் விட்டுவிட்டார்கள். சுவாமிகள் குடும்பத்தில் இருந்தாலும் இல்லறத்தில் பற்றில் லாமல் நடந்துவந்தார்கள்.

''எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே'' - என்றபடி

சுவாமிகளுக்கு எப்போதும், நந்திகேசரின் திருவடிகளி லேயே மனம் அழுந்தி இருந்தது.

## மேல்நிலை எய்தல்

சுவாமிகள் நந்திதேவரின் திருவருள் வழிகாட்டும் முறைப்படி, வானப்ரஸ்தம் என்னும் மேலான ஆச்சிரமத்தையடைய எண்ணி, யாத்திரைக்குப் புறப்பட்டார்கள். அப்போது மனைவியாரும், விடாப்பிடியாகத் தானும் உடன் வருவதாக வற்புறுத்தினர்கள். சுவாமிகள் குருவின் திருவருள் பெற்று, மனைவியாருடன் யாத்திரைக்குப் புறப்பட்டார்கள். அநேக க்ஷேத்திரங்களை வணங்கிக் கொண்டு வந்தார்கள். திருவருள் சோதனையால், திடீரென்று மனைவியாருக்கு வயிற்று வலி கடுமையாகத் தாககி விட்டது. எந்த வித மருத்துவச் சிகிச்சைக்கும் அந்தநோய் நிற்காமையால் திருவருட் செயற்படி மனைவியார் சுவாமிகளைத்தானேவிட்டு விலகி ஊருக்குப் போய் விட்டார்கள். சுவாமிகளும் இது திருவருட் செயல் என்று கருதி மேலும் செல்லத் தொடங்கினர்கள்.

## சமய நிலை

இப்படியாக சுவாமிகள் வைணவ மதத்தில் தோன்றியும் நந்தியெம்பெருமானுடைய திருவருட் கலப்பில் ஈடுபட்டு ஆன்ம வழியினைக் கோலிக் கொண்டது, சுவாமிகளின் முன்னைய வினைப் பயன் என்றே சொல்ல வேண்டும். சுவாமிகள் வைணவ மரபில் தோன்றியும், திருவருட் பேற்றால் சைவ சமய நெறிநிற்கும் நிலை உண்டாயிற்று.

## திருக்கழுக்குன்றம்

சுவாமிகள் யாத்திரைசெய்து வருங்கால் தொண்டை நாட்டுத் திருத்தலங்களுள் திருக்கழுக்குன்றம் வந்து சேர்ந்தார்கள். திருக்கழுக்குன்றம் சைவ சமய ஆசாரிய மூர்த்திகளால் பாடப் பெற்ற சிவ ஸ்தலம். மலைக்கோயிலும் அடிவாரக் கோயிலும் உடையது. மலையில் இன்றும் கழுகுகள் தாமே வந்து உணவருந்திப் போவதை ஆஸ்திகர்

கள் கண்டு வியக்கின்றனர். மாணிக்கவாசக சுவாமிகளுக்குத் திருப்பெருந்துறையில் அருள்செய்ய குருவடிவான சிவபிரான், இங்கே காட்சியளித்து ஆண்டார் என்று திருவாதவூரடிகள் புராணம் கூறும். மாணிக்கவாசக சுவாமிகளே,

''கணக்கிலாத் திருக்கோலமே வந்து
காட்டினய் கழுக்குன்றிலே''

என்றுஅருளியிருப்பதையும்அறியலாம். அந்தக்கழுக்குன்றத்திற்குச் சுவாமிகள் வந்தவுடனே, சுவாமிகள் தம்மை மறந்து பக்திபரவசராய் மலையினைக் கண்டதும் வணங்கினுர்கள். சங்கு தீர்த்தத்தில் முழுகினுர்கள். க்ண்ணப்பர் காளத்தியைக்கண்டதும் குடுமித்தேவரைக் கும்பிடச் சென்றுற் போல சுவாமிகள் மலைமேல் ஏறினுர்கள். தன்னை மறந்து அன்று பகலும் இரவும் அங்கேயே தங்கிவிட்டார்கள். உணவும் இல்லை உறக்கமும் இல்லை. மறுநாள்காலை மலையைவிட்டு இறங்கினுர்கள். நாட் கடன்களை முடித்துக் கொண்டு மறுபடியும் மலைமேல் ஏறி ஆண்டவனையே தியானித்தும் போற்றியும் உணவுக்கு சுவாமிககு அபிஷேகித்த கோமுகமூலம் வரும் பாலை மாத்திரம் உண்டு வந்தார்கள். உடல் மிகவும் இளைத்துவிட்டது. இதனையறிந்த அர்ச்சகர் ஒருவர் திருவருள் குறிப்பின்படி சுவாமிகளை உசாவி தெய்வ பிரசாதத்தை சுவாமிகட்கு உணவாக அளித்தார். அதனை உண்டு மலைமேலேயே எட்டுநாள் கழித்தார்கள். பனியிலும் வெயிலிலும் வாடினதால் சுவாமிகளின் கால்களிலும் உதடுகளிலும் வெடிப்புகள் உண்டாயின. அதனைத் திருவருட் குறிப்பால் உணர்ந்த அர்ச்சகர் சுவாமிகளின்பூரணநிலையை உணர்ந்தும் சுவாமிகளின் அதிதீவிரபக்குவ நிலையைஅறிந்து கோவிலின் திறவுக்கோலைக் கொடுத்துஅங்கேயே தங்க வசதி செய்தனர். அதன்படி சுவாமிகள் தேவப்பிரசாதம்உண்டும் ஆண்டவனைத் தரிசித்தும், வேதகிரி வலம் வந்தும் தியானத்தில் அமர்ந்தும் ஆரூடநெறியில்செல்லும்மகாஞனிகவேவிளங்கி வந்தார்கள். பசியால் பிணியால் பனியால் உணவில்லாமை

யால் உடையின்மையால் வரும் துன்பங்கள் சுவாமிகளை வருத்தவேயில்லை. அவர்கட்கு உலகமே மறந்து போய் விட்டது. இப்படியே சுவாமிகள் திருக்கழுக்குன்றத்தில் எட்டு ஆண்டுகள் நல்வாழ்வு நடத்தி ஆன்ம லாபம் பெற்று ஆரூட கெதியில் சென்று கொண்டிருந்தார்கள்.

## இயல்புத் துறவு

சுவாமிகள் ஒருநாள் சங்கு தீர்த்தக் கரையில் இருக்கும் போது ஒரு நாவிதன் க்ஷவரம் செய்யவந்தான். எப்போதும் சுவாமிகள் திங்களுக்கு ஒருமுறைதான் க்ஷவரம் செய்து கொள்வது வழக்கம். ஆனால் அவன் நாலைந்து நாளைக்குள்ளேயே அன்று வந்து சுவாமிகளை க்ஷவரம் செய்து கொள்ள வேண்டினான். சுவாமிகளும் உடன்பட்டார்கள். நாவிதன் க்ஷவரம் செய்யத் தொடங்கினவன் குடுமியை அவனறியாமலேயே எடுத்துவிடத் தொடங்கினான். நடுவில் பயந்து சுவாமிகளைப் பார்த்துத் தெரியாமல் குடுமியைக் களைந்து விட்டதாகவும் மன்னிக்கும்படியும் வேண்டினான். சுவாமிகள் திருவருட்குறிப்புணர்ந்து அவனைக் கோபிக்காமல் முற்றும் களைய ஆணை தந்தார்கள். சுவாமிகள் க்ஷவரம் செய்து கொண்ட உடன் தன் மேலாடையை அவனிடம் கொடுத்தனுப்பிவிட்டு உடுத்தியிருந்த ஆடையை இரண்டாகக் கிழித்து ஒன்றை உடுத்தி மற்றொன்றை மேலணிந்து குளத்தில் இறங்கி மூழ்கி எழுந்தார்கள். இயல்பாகவே அன்று வரை சுவாமிகள் அணிந்திருந்த பூநூல் என்னும் உபவீதமானது தானாகவே, கழன்று நீரில் மிதந்துவிட்டது. அதனையறிந்த சுவாமிகள் தமக்கு ஏற்படும் அதிவர்ணாச்சிரமத்தின் (சந்யாசிநிலை) அறிகுறி என்பதை அறிந்து எல்லாம் திருவருள் செயல் என்று உணர்ந்து இவையெல்லாம் கனவில் தோன்றிய அருட்குறிப்புக்கு ஒத்திருத்தலை உணர்ந்து மேற்கொண்டு சென்றார்கள்.

## எதிர்பாராத நிகழ்ச்சிகள்

சுவாமிகள் பிராமணர், வைணவர். அதுவரையும் வருணாச்சிரம ஒழுக்க முறையை விடாது நடத்தி வந்தவர்கள் அன்றைக்குத் திடீரென்று ஒரு பண்டாரம் சுவாமிகளைக்கண்டு "சுவாமி! தாங்கள் இன்று கட்டாயம் என் வீட்டில் உணவு கொள்ள வேண்டும்" என்று வேண்டினான். சுவாமிகள் இனி நாம் இந்த சாதி சமயகட்டுகட்கு மேலான அதிவர்ணாச்சிரம நிலையில் வாழத்திருவருள் செலுத்துகிறது என்றுணர்ந்து அப்பண்டாரத்தின் வேண்டுகோட் கிணங்கினார்கள். அந்த நாள் முதல் தம்மை விரும்பியழைத்து அதிதியாக உபசரிக்கும் அன்பர் வீடுகட்குச் சென்று உணவருந்தி இறை வழிபாடும் தியானமும் செய்து வந்தார்கள்.

## அதிசய நிகழ்ச்சி

சுவாமிகள் திருக்கழுக்குன்றத்தில் இப்படி வெள்ளையுடையணிந்து துறவியாக வாழ்ந்து வரும்போது ஒரு அதிசய நிகழ்ச்சி உண்டாயிற்று. திருக்கழுக்குன்றத்துக்கு அடுத்த தொண்டை மண்டல வேளாளர் குலத்தில் பிறந்த ஒரு செல்வந்தருக்கு உடலில்பெருவியாதி உண்டாகிவிட்டது அதனால் அவர் துன்பப்பட்டுக் கொண்டு வேதகிரீசரை வேண்டித் தான தருமங்களைச் செய்துகொண்டு வந்தார். ஒரு நாள் கனவில் அந்த முதலியாருக்கு ஒரு நிகழ்ச்சி உண்டாயிற்று "திருக்கழுக்குன்றம் சென்று மலையையும் வேதகிரீசரையும் வணங்கி அங்கு வந்துள்ள ஒரு உண்மையான உயர்ந்த யதீந்திரருக்கு (சந்யாசி) உன்கையால் பக்தியோடு உணவருத்தினால் உன் வியாதி நீங்கிவிடும்" என்று அந்த முதலியாருக்கு கனவு உண்டாயிற்று. அப்படியே அந்த முதலியார் திருக்கழுக்குன்றத்தில் வந்து அறஞ் செய்து இறைவனை வணங்கி அடியார்க்கு உணவருத்திக்

கொண்டு வரும்போது நம் சுவாமிகளைக் கண்டார். முதலியார்க்கு அளவிலா மகிழ்ச்சியுண்டாயிற்று. எப்படியாவது உணவு ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வேண்டினார். சுவாமிகள் அப்படியே இசைந்து அந்த முதலியார்கொடுத்த உணவை மிக மகிழ்ச்சியோடு உண்டார்கள். அன்று முதல் நோய் குறையத்தொடங்கி, நாளடைவில் நோயே முற்றும் நீங்கிக் குணமடைந்தார். சோசியமும் கனவும் பலித்து நோய் நீங்கக்கண்ட முதலியார் அது முதல் சுவாமிகளிடம் அளவிலாத பக்தி செலுத்தி 'வந்தார். திருக்கழுக்குன்றம் சென்னைக்கு அண்மையில் உள்ளதால் பலப் பல பெரிய மனிதர்கள் அங்கே சிவ தரிசனத்துக்கும் க்ஷேத்திர தரிசனத்துக்கும் அடிககடி வருவார்கள்.

## ஆச்சிரமம் அமைத்தல்

பெங்களூர், வேலூர், சென்னை முதலிய பெரிய நகரங்களிலிருந்தும் பெரிய மனிதர்கள் சுவாமிகளைக் காணவும் அவர்களுடைய அருள் உபதேசம் பெறவும் வருவார்கள். இந்தச் செய்தியும் அடிகளார், ஏழைகளிடமும் அன்பர்களிடமும் கருணை காட்டுவதையும் அறிந்து, சுவாமிகளுக்கு வேதகிரிமலையின் கீழ்த்திசையில் பக்கத்தில் ஒரு சிறு ஆச்சிரமம் ஒன்று நிர்மாணம் செய்தார்கள். ஆச்சிரமத்திற்குப் பக்கத்தில் நந்தவனம் ஒன்றும் அடியார்கள் தங்க வசதியும் செய்து அமைத்தார்கள். இந்த உதவியைச் செய்தவர்களில் சிறந்தவர், உள்ளேரிப்பட்டு ஸ்ரீ சுப்பா ரெட்டியார் குமாரர் ஸ்ரீ லெக்ஷ்மி நாரா்யண ரெட்டியார் என்பவர் மிகுந்த உடலுழைப்பும் பணச் செலவும் செய்தவராவார்கள். சுவாமிகள் அந்த ஆச்சிரமத்தில் நந்தி மூர்த்திகளுடைய திருவுருவம் பிரதிஷ்டை செய்து பூஜை செய்துவந்தார்கள். இப்படியாகத் திருக்கழுக்குன்றத்தில் எட்டு ஆண்டுகள் செல்லும்போதே இடை இடையே புதுவைக்குச் சென்று தன்னுடைய ஆரூட கதி பூரண நிலையடையும் காலத்தை நந்திகேசருடைய திருவாக்கின் மூலமும் உபதேசத்தின் மூலமும் அடிக்கடி அறிந்து வந்தார்கள்.

## வெள்ளாழங் குப்பம் வருகை

இந்த நிலையில் சுவாமிகளுக்குத் திருக்கழுக்குன்றத்தில் இருக்கும்போதே அநேக அன்பர்கள் தொடர்பு உண்டாயிற்று. அதனுல் விழுப்புரம் தாலூகாவில் உள்ள வெள்ளாழங்குப்பத்திற்கு அடிக்கடி வர ஏது உண்டாகிச் சில காலம் வெள்ளாழங்குப்பத்திலேயே தங்கும்படி நேரிட்டது. அங்கே ஸ்ரீ அரிசி கவுண்டர், சிவபெருமான் பக்தர் குருலிங்க பிள்ளை, சுப்பிரமணியன் செட்டியார் இவர்கள் எல்லோரும் சுவாமிகட்குப் பக்தர்களாய் சீடர்களாய் பணிசெய்து பெருமை பெற்ருர்கள். இப்போது நல்வாழ்வு வாழ்ந்துவரும் திரு. கோண்டூர் கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களும் வெள்ளாழங்குப்பத்தில் சுவாமிகளிடம் பழகித் தொண்டு செய்து அருள் பெற்றவாகளில் ஒருவர் ஆவர்.

## திருவாரூர் சென்றது

அதிவர்ணுசிரமத்தில் இவ்விதமாக சுவாமிகள் ஒழுகி வரும்போது குருமூர்த்தியினுடைய உத்திரவுப்படி தெற்கே யாத்திரைக்குப் புறப்பட்டார்கள். திருவாரூர் சோழநாட்டு திருப்பதிகளில் மிகச்சிறந்தது. பஞ்சபூதத் திருத்தலங்களுள் ஒன்று சுந்தரமூர்த்தி நாயனுர்க்கு அருள் செய்த தலம். துறவிகட்கு வீட்டு நிலை காணும் பெரிய க்ஷேத்திரம். கமலாலயம் என்று பேசப்படும் பெரிய திருப்பதி. இறைவன் தியாகராஜ மூர்த்தியாய், எண்ணிய எண்ணியபடி அருளும் திருப்பதி. வன்மீகமாய் சுயம்புவாய் எழுந்தருளி காட்சியளிக்கிருர். முசுகுந்தன் முதல் அனைவரும் வணங்கிய திருப்பதி. மனுநீதிச்சோழன் அரசு செய்து செங்கோல் சீர்பெற்ற சிவ க்ஷேத்திரம். அந்த திருப்பதியைச் சுவாமிகள் வந்து சார்ந்தார்கள்.




## காஷாயம் பெறுதல்

சுவாமிகள் ஆலயம் சென்று இறைவனை வழிபட்டு ஒரு மடத்தில் ஒரு சார் தங்கியிருந்தார்கள். அப்போது தருமபுர ஆதீனத்திலிருந்து தம்பிரான் சுவாமிகள் ஒருவர் கடவுள் வழிபாட்டுக்காக வந்திருந்தவர் சுவாமிகளைக் கண்டார்கள். உடனே சுவாமிகளின் தோற்றப்பொலிவும் பக்குவ நிலையும் கண்டு சுவாமிகளை நோக்கித் ''தாங்கள் சந்யாசம் பெறவேண்டிய அவ்வளவு உயர்ந்த பக்குவ நிலையில் இருக்கிறீர்கள். தங்கட்கு இன்றே காஷாயம் கொடுக்கவேண்டும். அதற்கு வேண்டிய பூசை வழிபாட்டுககு வேண்டிய செலவுகளை எங்கள் மடத்துச் செலவில் வைத்துக் கொள்ளுகிறோம். தாங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று தம்பிரான் சுவாமிகள் வேண்டினார்கள். சுவாமிகளும் இதுவும் திருவருட் செயல் என்று உடன்பட்டார்கள். அன்று தியாகராஜ பெருமானுக்கு விசேஷ பூசை நடத்தி குருக்கள் திருநீற்றுப் பிரசாதமும் தந்து காஷாய உடையைத் தம்பிரானிடம் கொடுத்தார். தம்பிரான் சுவாமிகள் கைநீட்டி வாங்கும்போது திடீரென்று கையை இழுத்துக்கொண்டு ''நான் காஷாயம் அடிகட்குக் கொடுக்கத் தகுதியுடையேன் அல்லேன். இந்தக் காஷாய உடையை வன்மீக நாதருக்குச்சாற்றி அதனைத் தாங்களே அடிகளிடம் கொடுங்கள்'' என்று கூறினார். அப்படியே குருக்கள் வன்மீகநாதருக்குச் சாற்றிக் கொண்டுவந்து அடிகளாரிடம் கொடுத்தார். சுவாமிகள் இறைவன் சந்நிதானத்திலேயே வாங்கி திருவருட்செயல் நினைந்து உருகி அணிந்து, அன்று முதல் முற்றும் துறந்த முனிவராய்க் கல்லாடையுடுத்துக் காட்சியளித்தார்கள். என்னே அருட் செயல்! ஆண்டவன் அடியாரை ஆட்கொள்ளும் முறை சுவாமிகளிடம் காண்கிறதல்லவா? சுவாமிகள் சில நாள் அங்கிருந்து இறைவனை வழிபட்டுப் பின் திருக்கழுக்குன்றம் சென்றார்கள்.

## சாது சாமிகளின் தொடர்பு

சுவாமிகள் யாத்திரையாகத் தெற்கே எழுந்தருளின பொழுது ஆச்சாள்புரம் ஒருசமயம் சென்ருர்கள். அப்போது ஆச்சாள்புரத்தில் இருந்த சாதுசாமிகள் நம் சுவாமிகளிடம் பக்தி செலுத்திஞர்கள்.

## தேவாலய அமைப்பு

சுவாமிகள் சிலகாலம், வெள்ளாழங்குப்பத்தில் தங்கியிருந்தபோது, அங்கே, ஸ்ரீ வல்லிதேவசேனுசமேத சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் ஒன்று கட்டி முடித்தார்கள். அந்தத் திருப்பணி முற்றுப்பெற நான்கு ஐந்து ஆண்டுகள் ஆயின. அப்போது சாதுசுவாமிகள், நம் சுவாமிகளிடம் இருந்து, பாடங் கேட்டும், அருள்பெற்றும் வந்தார்கள். சுவாமிகள் சிலரிடமே மிக நெருங்கிப் பழகிஞர்கள். பழநியில் ஸ்ரீ கிருஷ்ணசாமி பண்டாரம் என்பவர் ஒருவர். அவருக்குப் பழநியில் அடிவாரத்தில் ஒரு மடம் உண்டு. அது மிகவும் அமைதியான இடம். அங்கே சுவாமிகள் சென்று தங்குவது பழக்கம். அந்த இடம் இப்போது மிகவும் பெருமை பெற்றதாய் விளங்குகிறது. அப்படியே, ஐயம்பேட்டை ஸ்ரீ திருநாதம் செட்டியார், அம்பா சமுத்திரம், ஸ்ரீ மகாலிங்க முதலியார் இவர்களும் சுவாமிகளோடு பழகியும், சுவாமிகளை உபசரித்தும் அருள் பெற்றவர்கள் ஆவார்கள். இப்படியாக கண்ட கண்ட இடந்தோறும், அடியார்கட்கும் அன்பர்கட்கும், தங்கள் ஞான ஒளியிஞல் அருள் விளக்கம் செய்து வந்தார்கள்.

# துறவு வாழ்க்கை

## திருக்கழுக்குன்றம்

சுவாமிகள் துறவிகளான பிறகு, வாழ்க்கையில் பல விதமான மாறுபாடுகளும். வளர்ச்சிகளும் உண்டாயின. சுவாமிகள் திருக்கழுக்குன்றம் வந்திருந்தார்க்ள். ராஜரசர் சலவை ராமசாமி முதலியார் சென்னையில் சீரும் சிறப்புமாக வர்ழ்ந்து வந்தார்கள். ராமசாமி முதலியார் சுவாமிகளுடைய பெருமையையும், அருள் வாக்கையும் கேள்விப்பட்டு சுவாமிகளைக் காணவும், அருள் மொழிகளைக் கேட்கவும் திருக்கழுக்குன்றம் வந்து சுவாமிகளைத் தரிசனம் செய்து அருளுபதேசம் பெற்றுர்கள். ஸ்ரீ. வே. மகாதேவ முதலியார் போன்ற பெரிய மனிதர்கட்கு, அவர்களுடைய உலகியலுக்கேற்ற அளவிலும் அவர்கள் ஆன்மநலம் பெறும் வகையிலும்,அவர்களுடைய பக்குவ நிலையறிந்து தகுந்தாற்போல் உபதேசிப்பார்கள். அன்றுமுதல் முதலியார் சுவாமிகளிடம் பேரன்பு பூண்டு ஒழுகி வந்தார்.

## நீலகிரி வாழ்க்கை

சுவாமிகள் நீலகிரியில் சிலகாலம் அன்பர்களுடைய வேண்டுகோட்கு இணங்கி வசித்து வந்தார்கள். அப்போது அங்கே, அநேக பக்தர்களுக்கு அருளுபதேசம் செய்தார்கள். அவர்களில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்கள், மேல் நாட்டு ஐரோப்பியர்கள் இருவர். அவர்களை ஹெட்பீல்டு Hed Eield என்று அழைப்பது வழக்கம். அவர்களில் ஒருவர், போலீஸ் அலுவலில் உயர்ந்த பதவி வகித்து ஓய்வு பெற்றவர். மற்ருெருவர் காட்டு இலாகாவில் பெரிய பதவி வகித்தவர். இவர்கள் இருவருக்கும், நீலகிரி மலைச்சாரலில் காபித் தோட்டங்களும், டீ தோட்டங்களுல் இருந்தன. இவர்கட்குத் தனியாக அரண்மனை போன்ற பங்களாவும் இருந்தது. இவர்கட்கு ஹிந்து சந்நியாசிகளிடம் அளவற்ற

மதிப்புண்டு. அவர்களிடம் அரிய விஷயங்களை அறிய வேண்டும் என்ற அவாவும் உண்டு. ஒருநாள் இருவரும், குதிரை மேலேறி, உல்லாசமாக வந்து கொண்டிருக்கும் போது வழியில் சுவாமிகளேக் கண்டு விட்டார்கள். உடனே குதிரையினின்றும் இறங்கி, அடிகளே வணங்கித் தங்களிருப்பிடம் வரவேண்டுமென்று கூறி விலாசமும் கொடுத்தார்கள் சுவாமிகளும் அவ்வாறே மறுநாட் காலே குறித்த நேரத்தில் அங்கு சென்று அவர்கள் கேட்ட அநேக ஐயங்களே விளக்கிக் கூறினுர்கள். அந்த ஐரோப்பியர்கள் அளவிலா மகிழ்ச்சி யடைந்து, உபசரித்ததோடு, எப்போதும் அடிக்கடி வந்து போக வேண்டினுர்கள். சுவாமிகளும் அவர்கள் விருப்பப்படி அவர்கட்கு அருளுபதேசம் செய்து வந்தார்கள். இவ்வளவு பெரிய மனிதர்களுடைய பழக்கமும், தொடர்பும் இருந்தாலும், சுவாமிகள், உலக வியாபாரங்களில் உள்ளத்தை ஒருக்காலும் பறிகொடுப்பதில்லே. நிவர்த்தி மார்க்கத்தில் திருவருள் ஆணேயின்படி நடந்து வந்தார்கள். உலகத்தில் அநேக துறவிகள் புகழுக்கும், தங்கள் நினேவுக்கும், ஏற்றபடி நடந்து தவறி விழுந்து விடுவதை அறிவோம். சம்சார பந்தம் விடாது இழுத்துவிடும். ஆசை குறையாது. ஆணவ பலம் விடாது. விணேப்பயன்களேத் தடுக்க முடியாது. கருமங்கள் மேலும் மேலும் நிகழும். அதனுல் துறவு நெறி நீடித்துத் தன் பலனே அளிக்காது. இந்த நிலேயையறிந்த சுவாமிகள், தாங்கள் மேற்கொண்ட சந்நியாச ஆச்சிரமத்தின் வழியை விடாது தன்னேச் சார்ந்தவர்களுடைய பக்குவ நிலேக்கேற்ப, உபதேசம் செய்து வந்தார்கள். அதே நேரத்தில் உலகியலில் விழுந்து விடாமல், தங்கள் மனத்தை ஒரே நிலேயில் நிறுத்தி எந்த இடத்திலும் சலனப்படாமல் பாதுகாத்தும் வந்தார்கள்.

## பழநி ஆச்சிரமம்

சுவாமிகள், சாது சாமிகளின் பழக்கத்தாலும், முன்னேயே, பழநி பண்டாரத்தின் தொடர்பாலும், பழநிக்கும்

அடிக்கடி செல்வதுண்டு. அங்கே அடிவாரத்திலிருக்கும் ஆசிரமத்தில் தங்கி சாது சாமிகளுக்கும், மற்றைய அடியார்களுக்கும், அன்பர்கட்கும் உபதேசம் செய்து வந்தார்கள்.

## திருச்சிராப்பள்ளி தொடர்பு

சுவாமிகள், திருச்சிராப்பள்ளியில், டாக்டர் நாராயணசாமிப் பிள்ளை, உறையூர் உலகநாதன் செட்டியார் இவர்கட்கு அருளுபதேசம் செய்து வந்தார்கள். அவர்களுடைய தொடர்பால் அடிக்கடியோ, பல மாதங்கட்கு ஒரு முறையோ, திருச்சிராப்பள்ளிக்கு வரவேண்டிய நிலைமையும் சுவாமிகளுக்கு ஏற்பட்டது.

## நாகப்பட்டினம் செலவு

நாகப்பட்டினத்தில், சுவாமிகளுக்கு மாணவர்கள் பலர் இருந்தார்கள். சுவாமிகள் அடிக்கடி நாகப்பட்டினம் செல்வதுண்டு. அங்கிருந்து பல இடங்கட்கும் செல்வதுண்டு எப்போதும், பல நாளைக்கோ, பல மாதங்கட்கோ ஒருவரிடத்தில் தங்கும் பழக்கம் சுவாமிகள் வைத்துக் கொள்வதில்லை.

## உணவு நிலை

துறவிகட்கு உணவுக் கட்டுபாடு வேண்டும் என்பது சுவாமிகளின் கருத்து. உணவில் சுவைகண்டு உண்பது புலனடக்கத்தைக் கெடுத்துவிடும் என்பது யாவரும் அறிந்தது. ஒருவன் உடல் வளர்ச்சிக்கும், மனோ நிலைக்கும், உயிர் வாழ்க்கைக்கும் வேண்டிய அளவு உண்ணவேண்டுமேயன்றி இல்லறத்தான் போல, அறுசுவை உண்டியைச் சுவை பார்த்து துறவி உண்ணக்கூடாது என்ற கட்டுப்பாடு உடையவர்கள் சுவாமிகள். சிறந்த அன்பர்கள் சுவாமிகளுக்கு

எப்போதாவது உபசாரம் செய்யவேண்டும் என்று எண்ணி வற்புறுத்தினுல் சுவாமிகள், கண்டிப்பாய் அன்னம், வற்றல், ரசம், மோர் இவைதவிர வேண்டாம் என்று கூறிவிடுவார் கள். சரீர பூதபௌதிகங்கள் தன்னுடைய, ஆரோகண கதிக்கு ஏற்ற வகையில், உணவு அமைய வேண்டும் என்ற கட்டுப்பாடு உடையவர்கள். இப்படி நடப்பது எளிதல்ல, ருசியை வெல்லுபவனே, புலன்களை வெல்ல முடியும், என்ற தத்துவத்தை யுட்கொண்டவர்கள். எவனொருவன் சுவாசிக் கும் மூச்சுக்காற்றில் ருசியை அறிவதில்லையோ, அப்படியே உணவிலும், ருசிகாணுது உண்ணப் பழகவேண்டும். மூச்சுக் காற்று இயல்பாக எப்படி விருப்பு வெறுப்பில்லாமல் நடக் கிறதோ, அப்படியே உணவிலும் விருப்பு வெறுப்பில்லாமல் நடக்கிறதோ, அப்படியே உணவிலும் விருப்பு வெறுப்புத் தட்டக்கூடாது. அப்போதுதான் அந்தககரண சுத்தியும், இந்திரியத் நிக்ரகமும் ஏற்படும் என்ற உண்மையை யடியார் களுக்கு உபதேசித்து வந்தார்கள்.

## ஜீவகாருண்ய நிலை

சுவாமிகள் ஏழைகளிடம் மிகுந்த அன்புடையவர்கள். ஏழைகளைக் கண்டால் தம்மையறியாமலே இரங்கி அருள் செய்வார்கள். உபகாரம் பெற்றவர்களில் பலர் சொன்னதா வது ''சுவாமிகள், எங்களுடைய நிலையைத் தாமே உணர் வார்கள். எங்களுக்கு மிகுந்த கஷ்டம் உண்டான காலங் களில், அந்த நேரங்களில் என்ன உதவி செய்ய வேண்டும் என்றறிந்து, உடனே செய்வார்கள். அப்போது செய்யும் சிறு உதவி காலத்தினுற் செய்த உதவியாய் என்றைககும் நிலைத்து நிற்கும். தமக்குப் பெரிய மனிதர்களிடம் கிடைக் கும் உயர்ந்த பொருள்களையும்கூட, எளியவர்கள் வருந்து வதைக் கண்டால் உடனே அவாகளிடம் அவர்களைக் கேட் காமலே கொடுத்து விடுவார்கள். உணவின்றிப் பட்டினிய ராய் இருக்கும்போது உணவுக்கு மாத்திரம் உதவி செய்வார் கள். எப்போது ஒருவனுக்குப் பொருள் தேவை என்றறிந்து

அந்த நேரத்திற்கு வேண்டிய சிறு பொருளுதவியைச் செய்வார்கள். செய்துவிட்டு, தாம்தாம் செய்தோம் என்ற எண்ணம்கூட இல்லாமல் திரும்பி விடுவார்கள்.

## அருளுள்ளம்

ஒரு சமயம் சுவாமிகள் ஒரு டாக்டர் வீட்டில் தங்கியிருந்தார்கள். டாக்டரிடம் ஒரு நாய் இருந்தது. அந்தநாய் சொறிநோயாலும், புண்ணாலும் மிகவும் கஷ்டப்பட்டது. டாக்டர் வேண்டிய சிகிச்சை செய்தும் பயன்படவில்லை. கடைசியாக, அந்த நாய் கஷ்டப்படுவதைவிட இறந்து விடுவது நல்லது என்ற முடிவுக்கு வந்து டாகடர் நாய்க்கு விஷம் கொடுத்து கொன்றுவிடத் துணிந்தார். விஷத்தைக் கலந்து எடுத்துத் தயங்கிக்கொண்டே இருந்தார். சுவாமிகள் அதனையறிந்து, அந்த விஷத்தை வாங்கி, அருள் கனிந்த உள்ளத்தோடு ஆகாரத்தோடு கலந்து அந்த நாய்க்குக் கொடுத்தார்கள். நாய் விஷம் உண்டது. ஆனால் இறந்து போகவில்லை. சிறிது சிறிதாக நோய் குணப்பட்டு நன்றாக வளர்ந்து நீண்ட நாள் வாழ்ந்தது. டாக்டர் அதிசயப்பட்டார். மனிதர்கள் உண்டிருந்தால் இரண்டு மணி நேரத்தில் இறந்துவிடுவார்களே, என்ன அதிசயம், இந்தநாய் நோய் நீங்கி வாழ்கிறதே என்று சுவாமிகளின் அருளைப் பாராட்டினார் டாக்டர். அருள் விஷத்தை அமுதமாகச் செய்து விட்டது.

## மற்றொன்று

சுவாமிகள் ஒரு சமயம் திருவண்ணாமலைக்குச் சென்றிருந்தார்கள். பக்கத்துக் கிராமங்களிற் படித்தவர்கள் பலர் கூடி சுவாமிகளிடம் வேதாந்த விஷயங்களில் சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்து வந்தார்கள். இப்படியே சிலநாள் நடந்து கொண்டு வந்தது. ஒருநாள் பலர் ஒன்றாகக்கூடிச் சொற்பொழிவு கேட்டுக் கொண்டிருக்கும் போது, ஒரு நிகழ்ச்சி நடந்தது. பக்கத்துக் காட்டில் வேடர்கள் ஒரு மானைத்

துரத்திப் பிடிக்க முயன்ருர்கள். மான் பயந்து, வேடர்களி டம் அகப்பட்டுக் கொள்ளாமல் ஓடிவந்து, சொற்பொழிவு செய்து கொண்டிருக்கும் சுவாமிகளுடைய காலில் வந்து சரணுகதியாக விழுந்தது. வேடர்கள் பின்னுல் துரத்திக் கொண்டே வந்தார்கள். மான் தன் கண்களால் இரக்கத் தைக் காட்டிச் சுவாமிகளைப் பார்த்தது. சுவாமிகள் மானைத் தடவிக்கொடுத்து வேடர்களுக்கு அறிவுரைகூறி, அவர் கட்கு வேண்டிய பொருளுதவியும் செய்து அனுப்பி விட்டு, மானைக் காப்பாற்றி அனுப்பினுர்கள். விலங்குகளும் எப்படி, ஜீவகாருண்யம் உடைய முனிவர்களைத் தாமே உணர்ந்து அன்பு செய்கின்றன என்பதை நாமறிகிருேம்.

## எல்லா உயிர்க்கும் இனியர்

சுவாமிகள் சோலைகளிலும், மரம் நிறைந்த காடுகளி லும், வசிக்க விரும்புவார்கள். வீடுகளுக்கு வந்தாலும், தோட்டங்களிலேயே நீண்ட பொழுதினைக் கழிப்பார்கள். அப்படி வாழும்போது, அங்கே மரங்களில் வசிக்கும் பறவை கள் சுவாமிகளைக் கண்டு அஞ்சி ஓடுவதில்லை. தங்களுடைய சுற்றத்தாராகவே கருதி, அவர் பக்கத்தில் வந்து விளை யாடும். வளர்த்தப் பறவைகளும் கூடப் புதியவர்களைக் கண் டால் பயப்படுவதை நாமறிவோம். ஆனுல் காட்டுப்பறவை களும் கூட சுவாமிகளை நேசித்து வாழ்ந்தன என்ருல் சுவாமி களின் நிலை எப்படிப்பட்டது என்பதையறியலாம்.

திருவள்ளுவா,

''கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்''

என்று கூறிய பொய்யாமொழி, மெய்யாயின் தன்மையை, உடனிருந்தவர்கள் சுவாமிகளிடம் நன்கறிவார்கள்.

## கடமையால் எதையும் செய்யலாம்

சுவாமிகள் உலகியலை நன்கறிந்தவர்கள். இல்லறதருமத்தை நன்ருக நடத்தினவர்கள். சுவாமிகளுக்கு இல்லறத்தில் வெறுப்பில்லை, இல்லறத்தை நன்கு நடத்திஞல், கடமைகளை ஒழுங்காகச் செய்தால், ஆண் பெண் இருபாலருமே நற்பேறு பெறலாம் என்று தன் மாணவர்களுக்கு உபதேசிப்பார்கள். அதற்கு அவர்கள் அடிக்கடி ஒரு புராண வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு அருளுவார்கள். அவர்கள் கூறும் உபதேசம் பின்வருகிறது. கொங்கணவர் என்ற முனிவர் மிகவும் பெரிய தவம் செய்தார். தவத்தால் அடையக் கூடிய பெரிய சித்திகளையும் பெற்ருர். ஒரு நாள் அவர் ஆற்றில் முழுகி, தியானம் செய்யும் தருவாயில் ஒரு கொக்கு ஆகாயத்திலிருந்து, அவரை யறியாமலே அவர் மேல் எச்சம் இட்டு விட்டது. உடனே முனிவர் அண்ணாந்து அந்தக் கொக்கினைக் கோபத்தோடு பார்த்தார். கொக்கு எரிந்து சாம்பலாய்ப் போய்விட்டது. அதனை யறிந்த கொங்கணவர் தன் தவவலிமையை நினைத்துப் பெருமை கொண்டார். அப்படியிருக்கும்போது, ஒருநாள், அந்தக்கொங்கணவர் ஒரு இல்லறத்தான் வீட்டிற்குப்பிக்ஷை ஏற்கச் சென்ருர். அப்போது, அந்த வீட்டில், தன் நாயகனையே தெய்வமாக வழிபட்டுவரும், கற்புடைநங்கையானவள், தன் நாயகனுக்குத் தொண்டு செய்து கொண்டிருந்தாள். அதஞல் சிறிது தாழ்ந்து தன் நாயகனுக்குரிய தொண்டுகளை முடித்துவிட்டுக் கொங்கணவருக்கு உணவு கொண்டு வந்தாள். அதனையறியாத கொங்கணவர், தனக்கு நேரங்கழித்து உணவு கொண்டு வந்ததாக மதித்து கோபத்தோடு, அந்த அம்மையாரை ஏறிட்டுப் பார்த்தார். அம்மையார் உடனே ''கொக்கென்று நினைத்தீரா கொங்கணவரே'' என்ருள். கொங்கணவர்க்குத் திடுக்கிட்டுப் போயிற்று. இந்த வரலாறு எப்படி இந்தப் பெண்ணிற்குத் தெரியும் என்று பயந்து போஞர். அல்லாமலும், தன் தவ பலமும், அந்தச் சாதாரண பெண்ணிடமும் பலிககாததற்கு அவ

மானப் பட்டும் போனர். உடனே, அம்மையாரை வணங்கித் தன் வரலாறு தங்கட்கு எப்படித் தெரியும்? என்று வினவினர். அம்மையார் தங்கள் ஐயங்களை எல்லாம், அடுத்த கிராமத்தில் வாழும், ஒரு கசாப்புக் கடைக்காரனிடம் கேட்டறியும்படிச் சொல்லியனுப்பினர்.

கொங்கணவரும் அப்படியே, அந்த ஊர் கசாப்புக் கடைக்காரரிடம் சென்ருர். உடனே அவர், கொங்கணவரைக் கண்டதும், ''வருக கொங்கணவரே ! அந்த அம்மையார் என்னைப் பார்த்துச் சந்தேகங்களைக் கேட்கும்படியனுப்பினர்களா ? என்று கேட்டு, அவரை இருக்கச் செய்துவிட்டுத் தான் செய்யும், அந்த இழி தொழிலாகிய மாமிசங்களை விற்றுவிட்டு வீடு சென்ருர். வீட்டில், அந்தக் கசாப்புக் கடைக்காரரின் பெற்ருேர்களான தாய் தந்தையர்கள் வயது முதிர்ந்தோராய் இருந்தனர். அவர்களுக்குச் செய்ய வேண்டிய தொண்டுகளை முடித்த பிறகு கொங்கணவரிடம் வந்து பேசினர். கொங்கணவர் எப்படி ஐயா உங்கட்கு இந்த மூன்று கால ஞானமும், தவ வலிமையும், ஆத்ம சக்தியும் வந்தது என்று அதிசயத்தோடு கேட்டார். அதற்கு அந்தக்கசாப்புக் கடைக்காரர் ''யார்எத்தொழிலைச் செய்தாலும், அவரவர் கடமைகளையறிந்து, தவருதுசெய்து ஆனல், தன்னையிழந்து விடாமல், பற்றற்று வாழ்ந்தால் ஆத்ம ஞானம் தானே வரும்'' என்று கூறினர். கேட்ட கொங்கணவர் வெட்கப்பட்டு, அன்று முதல் ஆணவம் நீங்கி ஆத்ம ஞானம் பெற முயன்ருர். இந்த வரலாற்றைச் சுவாமிகள், தம்முடைய இல்லற அன்பர்கட்கும் மாணவர்க்கும் அடிக்கடி உபதேசிப்பார்கள்.

## தத்துவ விளக்கம்

ஒரு மனிதன், எந்தச் செயலையும், சங்கல்ப விகல்பமில்லாமல், சீதோஷ்ண நிலை பாராமல், செய்து கொண்டே போக வேண்டும். வைதீக கருமமே கருமம் என்ற எண்ண

மும் கூடாது. கருமத்தைச் செய்யும் போது, ராஜசத்தில், சாத்வீகம் தழுவிவிட வேண்டும். அதற்குமேலும், சாத்வீகத்தில் ராஜஸம் தழுவ நடக்க வேண்டும். இப்படியாக பழகுவதுதான், தவத்திற்கு முதற்படி. இப்படிக் கருமங்களைச்செய்து பழகிவரும் உண்மையான அப்பியாசிகளுக்குத் தவம் தானே சித்திபெறும். இதைப்பற்றிக் கிறிஸ்து பெருமானும் மிக அழகாகப் பேசியிருக்கிறார். மூச்சையடக்குவது, யாகாதி கருமங்கள் செய்வது, தீர்த்தயாத்திரை செய்வது, இவையெல்லாம் வேண்டிய கருவிகள்தான். ஆனால், நல்லொழுக்கம், லௌகிக ஒழுங்கு, சாத்வீக நடை இவை இல்லாதவர்க்கு, அவை பயன்படா. எவனொருவன் மேற்கூறிய முறையில் சுத்தமான சாத்வீகத்தைக் கடைப்பிடிக்கிறானோ அவன் உண்மைப் பொருளையடைகிறான் என்று சுவாமிகள் கூறுவார்கள்.

## பூவாளூர் பழக்கம்

இப்படியாக சுவாமிகள் தங்களது அருளுபதேசங்களை அடியார்கட்கு வாரி வழங்கி வந்தார். சுவாமிகள் பழநியில் தங்கியிருந்த காலத்தில் பழநிக்கு அடிக்கடி ஒன்றாகச்சென்று வழிபடும் உறையூர் திரு உலகநாதஞ் செட்டியார் அருணாசலம் செட்டியாருமான இருவர். பூவாளூர் அமிர்தலிங்கம் செட்டியார் இவர்கட்கு சுவாமிகளிடம் ஈடுபாடு உண்டாயிற்று. உறையூரில் உலகநாதன் செட்டியாரும் பூவாளூர் அமிர்தலிங்க செட்டியாரும் நெருங்கிய நண்பர்களாகையால் அமிர்தலிங்க செட்டியாரிடம் சுவாமிகளின் பெருமையை உலகநாதன் செட்டியார் கூறியிருந்தார்கள். பூவாளூர் அமிர்தலிங்கம் செட்டியார், சிறந்த சைவ வேளாள செட்டியார் மரபிற் பிறந்த செம்மல் நற்குண சீலர் சைவப் பற்றும் சிவபூஜையும், பணிவும் அடக்கமும் உடையவர். யார்க்கும் இனியர். கற்றறிந்த புலவர்க்கும், நற்றவ யோகிகட்கும் நெருங்கிய நண்பர். சைவசித்தாந்தத் துறைபோய நுண்

மாண் நுழைபுலம் உடையவர் என்றும், யார்க்கும், இன் சொல்லும் நல் விருந்தோம்பும் இல்லற வாழ்க்கையும் உடையவர். அத்தகைய பெரியார் அமிர்தலிங்கம் செட்டியார் சுவாமிகளின் பெருமையைக் கேட்டதும் சுவாமிகளைக் கண்டு எப்படியும் அளவளாவி அழைத்து வரவேண்டும் என்று விரும்பித் திருச்சிக்குச் சென்றார். திருச்சிராப்பள்ளியில் டாக்டர் நாராயணசாமிப்பிள்ளை வீட்டுக்கு வந்திருந்த சுவாமிகளைக் கண்டு தரிசித்து அடுத்த நாள் காலை 8 மணிக்கு சுவாமிகளைப் பூவாளூருக்கு அழைத்துச் செல்வதாகச் சொல்லி வந்தார். மறுநாள் ஏதோ சிறு அலுவலால் செட்டியார் சிறிதுதாமதம் செய்து அழைக்கப்புறப்பட்டார் அதற்குள் சுவாமிகள் திருவருட்படி நடப்பவராகையால் 8 மணிவரை செட்டியாரைக் காணாமையால் டாக்டர் நாராயணசாமிப் பிள்ளையுடன் வேரூருக்குப் புறப்பட்டார்கள். ஆனால் இடையில் செட்டியார் சந்தித்து விடவே, சுவாமிகள் செட்டியாருடன் முதல் முதலாகப் பூவாளூருக்கு வந்து அமிர்தலிங்கம் செட்டியார் வீட்டில் தங்கினார்கள். பூவாளூருக்கு முதன் முறையாக வந்தாலும், சுவாமிகள் அந்த முறையிலேயே இரண்டு மூன்று நாள் அங்கேயே செட்டியார் வீட்டில் தங்கிவிட்டார். சுவாமிகளுடைய கருணைப்பேச்சும் தவ ஒழுக்கங்களும், அங்குள்ளவர்களை மகிழச் செய்தன. செட்டியாரும் மிகுந்த பணிவோடும் தன் இயல்பான நல்லறச்செயலோடும் அன்பர்கள் பலர்சூழ உபசரித்தார்கள் சுவாமிகள் சில நாள் தங்கியிருந்தபோது அமிர்தலிங்கம் செட்டியார் அவர்கட்கு வேண்டிய நண்பர்கள் பலர் சுவாமிகளை வந்து தரிசித்தும் பழகியும் அவர்களுடைய அருளுரைகளைக் கேட்டும் மகிழ்ந்தார்கள். பெருவளநல்லூரில் ஆசிரியரும் மருத்துவம் தெரிந்தவருமாய் இருந்த திருவாளர் வைத்திலிங்கையா என்பவர்கள் சுவாமிகளைக் காணவந்தார்கள். செட்டியார் வீட்டில் சுவாமிகளைக் கண்டும் அவர்களுடைய அருளுரைகளைக் கேட்டும் சுவாமிகளிடம் ஈடுபாடுடையவர்களாகி விட்டார்கள். அதனால்எப்படியாவது சுவாமிகளைப் பெருவளநல்லூருக்கு அழைத்துப்

போக வேண்டும் என்று கருதி சுவாமிகளை வேண்டினார்கள். அதோடுமல்லாமல் பெருவளநல்லூர் சென்று அவ்வூர் பெருநிலக் கிழாரும் வள்ளல் பாபு ரெட்டியார் மகனும் பெருங்கொடையாளரும் பெருங்குடிமகனும் யார்க்கும் எக்காலத்தும் நல்லவரும் திருச்சி ஜில்லாவிலேயே, பெரும் புகழ் பெற்றவருமான உயர்திரு ராவ்சாகிப், **B. P.** கிருஷ்ண சாமி ரெட்டியார் அவர்களிடமும் அவர் மனைவியார், கற்புக் கணிகலம், இல்லறத்தவம், நிறைகுண மேலார், திருமதி சத்தியபாமா அம்மையாரிடமும் வைத்திலிங்கையா சுவாமி களுடைய பெருமைகளைக் கூறினார்கள். ரெட்டியார் அவர்களும், சுவாமிகளைப் பூவாளூர் சென்று செட்டியார் வீட்டில் கண்டு பெருவளநல்லூருக்கு வரவேண்டும் என்று வருந்தி வேண்டினார்கள். சுவாமிகளும் அதற்கு இணங்கி மறுநாட்காலை பெருவளநல்லூர் சென்றார்கள்.

## பெருவளநல்லூர்

பெருவளநல்லூர் திருச்சி ஜில்லாவில், லால்குடி தாலூகாவில், லால்குடி புகைவண்டி நிலையத்திலிருந்து வடக்கே நான்கு கல் தொலைவில் உள்ள, ஒரு நல்ல பெரிய கிராமமாகும். பூவாளூருக்கும், பெருவளநல்லூருக்கும் இரண்டுகல் தொலைவிருக்கும். சோழர்கட்கும் பல்லவர் கட்கும் நடந்த போரில் சோழர் படைகள் தங்கியிருந்த இடமாகையால் அப்பெயர் பெற்றது. பல்லவர்கள் தங்கியிருந்த இடம் பல்லவபுரம் என்ற ஊரும் அண்மையில் உள்ளது. போர்நிகழ்ந்த இடமாகிய கண்ணனூர என்னும் சமயபுரமும் பக்கத்திலேயே உள்ளது. சாஸனங்களும் கல் வெட்டுகளும் சரித்திரக் குறிப்புகளும், பெருவளநல்லூரைக் குறிப்பிடுவதைக் காணலாம். அன்றியும் பூவாளியூர் திரு மங்கலம் திருத்தவத்துறை அன்பிலாலந்துறை மாந்துறை முதலிய சிவக்ஷேத்திரங்கள் சூழப்பட்ட பெருவளநல்லூர் நல்ல நிலவளமும், பெருங்குடி மக்களும் வாழும் இடம் அது.

பெருவள வாய்க்கால் நீர் பெருக்கி நிலவளம் அளிக்கும் நல்ல ஊராகும். அந்த ஊருக்கே திரு பி. பி. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களுடைய குடும்பம் வழி வழியாகப் பெருமை செய்வது. அவர்களுடைய வேண்டுகோளின்படி சுவாமிகள் பெருவளநல்லூர்சென்று வைணவர்கள் வழிபாட்டிடமாகிய சந்நிதி என்னும் பொது இடத்தில் தங்கினர்கள்.

## அடிகள் அருளுபதேசம்

சுவாமிகள் எந்த இடத்திலும் எவ்வளவு உபசாரம் நடந்தாலும், இரண்டு மூன்று நாட்களுக்கு மேல் தங்க மாட்டார்கள். ஆகையால் அங்கேயும் மூன்றே நாள் தான் தங்கினர்கள். அதற்குள் அந்த ஊரில் உள்ள அறிஞர்களும் ஆஸ்திகர்களும் வைணவப்பற்றுடைய கண்ணுசாமி ரெட்டியார் அவர்களும் சுவாமிகளிடம் அருளுபதேசம் பெற்றார்கள். சுவாமிகள் பெருவளநல்லூரில் இருந்தபோது, திரு. கிருஷ்ணசாமி ரெட்டியாா மனைவியார் திருமதி சத்திய பாமா அம்மையாரும் அவர் தங்கை சின்னம்மா அம்மையாரும் சுவாமிகளுடைய அன்புக்கும் அருளுக்கும், உரியவர்கள் ஆனர்கள். சுவாமிகளுடைய அருள்வாக்கில் ஈடுபட்டு பக்தி செலுத்தித் தங்க வேண்டும் என்று ஸ்ரீ ரெட்டியார் அவர்களது அருமந்த மனைவியார் திருமதி சத்தியபாமா அம்மையாரும் அவர் தங்கையாரும், ஸ்ரீ பொன்னுசாமி ரெட்டியாரும் பெரிதும் வேண்டினர்கள். சுவாமிகள் தம் இயல்பான முறைப்படி அங்கே பலநாள் தங்காமல்நாகப்பட்டினம் சென்று பொங்கல் கழித்து வந்து தங்குவதாக விடை பெற்றுப் பூவாளூர் வந்து நாகப்பட்டினம் சென்றார்கள்.

## இரண்டாவது முறை பெருவளநல்லூர் வருகை

சொன்னபடியே சுவாமிகள், பொங்கல் கழித்துப் பல இடங்கட்கும் சென்று பிரபவ ஆண்டு மாசி மாதம் பூவாளூருக்குச்சிவராத்திரிக்கு முன்பேவந்து திரு அமிர்தலிங்க செட்

டியார் அவர்கள் வீட்டில் தங்கினார்கள். மறுநாள், சுவாமிகளைப் பெருவளநல்லூருக்கு எழுந்தருளும்படி ஆசிரியர் வைத்திலிங்க ஐயாவும் திருமதி சத்தியபாமா அம்மையாரும் அன்பர்களும் வேண்ட, அவர்கள் விருப்பப்படியே பெருவள நல்லூர் சென்றார்கள். அந்த முறை சுவாமிகள் ஸ்ரீரெட்டியார் அவர்கள் செய்த முன்னை நல்வினைப் பயனாலும், இம்மையில் அடையும் புகழ் விண்ணியப் பெரும் பேற்றினாலும் ஸ்ரீரெட்டியார் அவர்கள் பங்களாவிலேயே தங்கினார்கள். அப்போது ஸ்ரீரெட்டியார் அவர்கள் ஊரில் இல்லை. ஆனாலும் அம்மையார் பய பக்தியோடு, குருவுக்குச் செய்யவேண்டிய அத்தனை தொண்டையும் திறம்பட நடத்திப் பேறு பெற்றார்கள்.

''தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம் அதனை அஃதிலார் மேற்கொள்வது''

என்ற பெரியோர் உண்மை வாக்கின்படி, திரு. சத்திய பாமா அம்மையார்க்கே அடிகளின் திருவருள் நிரம்பக் கிடைத்தது என்றால் அம்மையார் செய்த தவமே தவம். அன்றெல்லாம், சில நாட்கள் தொடர்ந்தும் அடிகள்சாஸ்திர விசாரணையிலும் பக்திப் பரவசத்திலும் மூழ்கி இருந்தார்கள் பிரபவ ஆண்டு மாசி 13உ சனிவாரம் பஞ்சமி அசுவதி நன்னாள் கூடிய அன்று முழுதும் இரவு பன்னிரண்டு மணி வரையிலும் ஆசிரியர் வைத்திலிங்கையாவும் அவருடைய உறவினர்களும் வேதாந்த விசாரணை நடத்தினவர்கள். பரிபக்குவம் உடையவர்களும், சுவாமிகளிடம் பல உண்மைகளை அருள் வாக்கால் கேட்டுத் தெளிந்தார்கள். அன்றைக்கு மணிவாசகப் பெருமான் அருளிய திருவாசக உண்மைகளையும் சமாதி நிலை என்பது என்ன? என்பது பற்றியுமே நீண்ட நேரம் அனுபவ முறையில் சுவாமிகள் அடியார்கட்கு உபதேசித்து வந்தார்கள். சுவாமிகளுடைய நிலையில் ஒரு அதிசயமான நிகழ்ச்சி உண்டு. அதாவது ஒரு துறவியானவர் தனக்கென்று ஒரு இடத்தையும் முன்கூட்டியே நிர்ண

கூடாது. ஒரு துறவியானவன் தனக்கென்று ஒரு
ருளையும் இச்சிக்கக்கூடாது. திருவருள் எங்கே எப்படி
த்துகிறதோ அப்படியே நடக்க வேண்டும் என்று
ப்பாடுடையவர்கள். ஆகையால் அவர்களுடையசமாதி
நிர்விகற்பமானது. சங்கற்பத்துக்கு உட்பட்டது
. விகற்பங்களும் சங்கற்பங்களும் ஆன்மாவைப் பிறப்
ள்ளிவிடும் என்ற முழு அறிவு படைத்தவர்கள்.

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுத்தல்
உற்ருர்க்கு உடம்பு மிகை''

பொன் மொழியின் உண்மையனுபவம் வாய்க்கப்
வர் ஆகையால், அன்று முழுவதும் சமாதி நிலையில்
ந்த அடியார்கட்கு சமாதி நிலையினை எடுத்துக் கூறி
டயே நிர்விகற்ப சமாதியில் நின்று விட்டாகள்.
- மார்ச்சு) பிரபவ ஆண்டு மாசி 13உ சனி பஞ்சமி,
நன்னுள் ஆண்டவன் தன் அடியாரைத் தன் அரு
ரியோடு ஒன்ருக இரண்டறக் கலந்து கொள்ளச்
நன்னுளாயிற்று.

## நிலைத்த பேறு

ரைமனங் கடந்து நின்ற பரமசிவம் தன்னருளாணை
பிரமவிட்டுணு ருத்ர, மகேசதாவிவமாம் ஐந்திடங்
திஷ்டித்து சரஸ்வதி, இலக்குமி, காளி, மகேசுவரி,
ணி என்ற ஐந்து சக்திகளோடு உயிர்கள் உய்ய அஞ்
இருளகல கர்மநாசம் பெற மாயா மலம் அறம்படைத்
ாத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்
லைச் செய்கிருன். பகலவன் சன்னிதியில் உலகம்
மானுல் பகலவன் ஒளிக்கும் பகவானுக்கும் எப்படிச்
ல்லையோ அப்படியே இறைவனுடையசந்நிதியில் அவ
் எல்லா உயிரும் எல்லா உலகும் இயங்குமானுலும்
க்கு எந்தசலனமும் இல்லை என்பதை உணர்ந்தசுவாமி

கள் இகபரம் இரண்டினிலும் உயிரினுக்குயிராகி எங்கும் நிறைகின்ற பரம்பொருளோடு இரண்டறக் கலந்து நமக்கு உயிர்க்குயிராய் இருந்து அருள் செய்யும் அருள்வடிவோடு காட்சியளிக்கிறார்கள்.

## மறுநாள்

எப்போதுமே சுவர்மிகள் விடியற்காலம் எழுபவர். அன்று நீண்ட நேரமாகியும் எழாமையால், பக்தர்களிற் சிலர் எழுப்ப அஞ்சினர்கள் என்றாலும் காலம் நீடிக்கவே சென்று சுவாமிகளைக் கண்டபோது இரவில் பேசிய சமாதி நிலையில் இருப்பதை யறிந்து வணங்கி வைத்திலிங்கையா திருமதி சத்தியபாமா அம்மையார் முதலானவாகட்கு அறிவிக்க மேற் கொண்டு ஏற்பாடுகளுக்கு முயன்றார்கள். அந்தப்பக்கத்தில் சுவாமிகளை அறிந்தவர்கள் குறைவு. ஆகையால் அதனை ஒரளவு அறிந்திருந்த ஸ்ரீசத்தியபாமா அம்மையார் ஸ்ரீரெட்டியார் அவர்கள் ஊரில் அப்போது இல்லாமையால் ஸ்ரீ சுவாமிகளைப் பொது விடத்தில் சமாதி வைகக்கூடாது என்று கூறிவிட்டுத் தன்புனற் காவிரியின் கால் வாயாம் பெருவளையின் கரையில் பண்டைப் பூந்தோட்டத்தில் பலகாலம் பக்தர்கள் பணிசெய்து பயன்படற்குரிய இடமே சாலச் சிறந்தது என்ற முடிவுக்கு வந்தார்கள். அந்தநேரத்தில் நல்வினையின் பயனால் ஸ்ரீரெட்டியார் அவர்களும் வந்து சேர அடியார் புடைசூழ அசுர சப்தம் விண் சூழ அருட்குருவாம் நந்தியடிசுவாமிகளை என்றும் அருள் வடிவாய் நின்று வழிபடும் அடியார்கட்குக் கண் கண்ட தெய்வமாய்க் காட்சியளிக்கும் சமாதி நிலையத்தில் அமர்த்தினாகள்.

## அன்று முதல்

அன்றுமுதல் ஸ்ரீரெட்டியார் அவர்களும் அம்மையாரும் பூசை ஆராதனை வழிபாடுமுதலிய அனைத்தையும், கண்

ணும் கருத்துமாகச் செய்து, கோயில் நந்தவனம் ஆச்ரமம் அமைத்து வரும் அடியார்களும் பக்தகோடிகளும் வழிபட வேண்டிய வசதிகளைச் செய்து வைத்திருக்கிறார்கள். ஸ்ரீரெட்டியார் அவர்களின் மனைவியார் திருமதி சத்திய பாமா அம்மையார் ஓரிரு ஆண்டுகட்கு முன் குருபாதம் சார்ந்தமையால் ஸ்ரீரெட்டியார் அவர்களே தொண்டினைத் திறம்படச் செய்து வருகிறார்கள். ஸ்ரீ சுவாமிகளுடன் நெருங்கிப்பழகின பக்தர்கள் தொண்டுசெய்வது பெரிதன்று சில நாளைய பழக்கத்தில் ஈடுபட்டு சுவாமிகளின் அருள் ஒளி இந்தப் பக்கத்தில் அனைவர்க்கும் கிடைக்கும்படிச் செய்யும் ஸ்ரீ ரெட்டியார் அவர்களைப் பாராட்டாமல் இருக்கமுடியாது அவர்கட்கு இறைவன் நந்தியெம்பெருமான் திருவருள் நிறைந்து நிற்குமாக.

## திருப்பாவை

ஸ்ரீசுவாமிகளின் கோவில் திருப்பணிக்கும், நந்தவன ஆச்சிரம திருப்பணிக்கும் சுவாமிகளின் தொண்டர்க்ள் அதிகமான உதவி செய்திருக்கிறார்கள். பழநிஸ்ரீ சாதுசாமி கள் பலதடவை உடனிருந்தும் பொருளுதவியும் பெருமுயற்சி யெடுத்தும் குருபூசை காலங்களில் அடியார் சூழவந்து ஆரா தனை செய்தும் பெருமைப் படுத்தினார்கள். அவர்களும் பரிபூரண நிலையைச் சென்ற ஆண்டில் அடைந்து அருட்குரு ஆனார்கள்.

## ஒரு குறிப்பு

இத்தனைச்சிறப்புக்கும் அந்தவரலாறு வெளிவருவதற்கும் காரணமாயிருந்தவர்களைக் குறிப்பிடவேண்டும். சுவாமிகளு டைய திருவருள் முழுதினையும் அவர்கள் வாழ்ந்த போதும் இப்போதும் எப்போதும் பெற்று அதன்படி இல்லறத்துறவி யாய் அடக்கமும் பொறுமையும் நல்லொழுக்கமும் தூயஉள் ளமும் இரக்கமும் உடையவராய் வாழும் பெரியார் திரு

வாளர் சென்னை தேவராஜ முதலியார் அவர்களுடைய தொண்டினையும் குறிப்பிட வேண்டும். இன்னும் அவர் சுவாமிகளையே தெய்வமாகவும் குருவாகவும் வழிபட்டு நல் வாழ்வு வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் ஓய்வு பெற்ற போலீஸ் சூப்பிரண்டெண்டாய் இருந்தும் செல்வகுடிமகனாக விளங்கியும் குருவருள் பெற்றதால் சுவாமிகளுடைய திருவருளால் திரு நந்திகேஸ்வரருடைய அருள் வாய்க்கப்பெற்றவராய் நல்வாழ்வு பெற்று மன நலம் உடையவர்களாய் வாழ்கிறார்கள். அவர்கள் கொடுத்த குறிப்புகளைக்கொண்டே ஒருவாறு இந்த வரலாறு எழுதப்பட்டது.

சுவாமிகள் பண்டு செய் நல் தவத்தால், பெற்றோர் பாக்கியப் பயனாய், இப்பூமியில் அவதரித்து, ஏறக்குறைய அறுபத்தாறு ஆண்டுகள் மானிடச் சட்டை தாங்கி வாழ்ந்த போது யார்க்கும் இடையூறு இன்றி இளமை கழிந்த நற்காலம் எல்லாம் பிறர் நலம் பேணும் பெரு வாழ்வு பெற்று, உள்ளத்துறவோடு உலகத்துறவும் பூண்டு வாழ்ந்தார்கள்.

''அறம் தான் இயற்றும் அவனிலும்,
கோடி யதிகம் இல்லம்
துறந்தான் அவனிற் சதகோடி உள்ளத்
துறவு உடையோன்',

என்ற முற்றுந் துறந்த பட்டினத்தடிகளின் திருவாக்கிற்கு இலக்கியமாய், வாழ்ந்த பெரியவர்கள் சுவாமிகள். அவர்கள் வாழ்க்கை ஆன்ம கோடிகளுக்கு ஆஸ்திகத்தையும், அருள் உள்ளத்தையும், உலக நிலையாமையையும் ஊட்டி வளர்த்தது. அவர்களுடைய அருள்வாக்கு அன்பர்களுக்கும், தொண்டர்களுக்கும், பிறவி என்னும் பெருங் கடலில் இன்ப துன்பப் பேரலையிற் சிக்காது இறைவன் திருவடிக் கரையைச் சேரப் பெரும் துணையாய் உதவிற்று. அவர்களுடைய சமாதி நிலை இன்றும் என்றைக்கும் திருவருளைச் சிந்திப்பார்க்குத் தெவிட்டாத இன்ப ஊற்றாய்

விளங்கா நின்றது. சுவாமிகள் சமாதி கொண்டருளிய இந்தப் பெருவளநல்லூர் அன்று முதல் சுவாமிகளின் மெய் அடியார்களுக்கும், பக்த கோடிகளுக்கும் ஒரு யாத்திரை ஸ்தலமாய், புண்ணிய க்ஷேத்திரமாய், தியான பீடமாய், குருவருள் பெறும் முக்கிய தரிசன இடமாய் விளங்கிக் கொண்டிருக்கிறது. சுவாமிகளின் திருவருள் ஸ்ரீநந்தியெம் பெருமானின் திருவருள் மூலமாக என்றும், ஆஸ்திகம் வளர அருள் உள்ளம் தழைக்க எல்லா உயிரும் இன்பமாக வாழ இவ்வுலகில் நின்று நிலவுவதாக.

எளியேனையும் அடிகளாரின் வரலாற்றைத் தொண்டர்கள் கொடுத்த சிறு குறிப்பைக் கொண்டு குறைந்த கால அளவில் இயன்ற அளவு எழுதச் செய்த எல்லாம் வல்ல முழு முதற் பொருளின் திருவருளுக்கு மனமொழி மெய்களால் வணக்கம் செலுத்துகிறேன்.

ஓம்

## ஸ்ரீ நந்தி யெங்குருவே நம;

''எங்கெங்கே பார்த்தாலும், எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங்கு இருப்பதும் நீ, யன்றோ பராபரமே''
- தாயுமானுர்.

''வான் முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க!! மன்னன்
கோன் முறை அரசு செய்க! குறையிலாது உயிர்கள் வாழ்க!!
நான் மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க!!
மேன்மை கொள் சைவநீதி வழங்குக உலகம் எல்லாம்!!!



# திருவருள் வாக்கு

சுவாமிகளின் தொண்டர்களுக்கு சுவாமிகள் அவ்வப் போது நிவர்த்தி மார்க்கத்தில் மனம் செல்லுவதற்காக உபதேசித்த அருள் மொழிகள் பலப்பல. அவற்றை முழுதும் தருவது என்ருல் நூல் விரியும். ஆகையால் அடிகளாருடைய திருவருள் பெற விரும்பும் அன்பர்கள் குறிப்பிற்காகவும், அடிகளாரது திருவுள்ளத்தைப் பலரும் அறியவும் சுவாமிகளினுடைய திருவாக்குகள் இரண்டொன்று கீழே தரப்பட்டுள்ளன.

1. ஜீவன் முக்த தசை பெறுவதற்கும், நிஷ்காமியம் பலிப்பதற்கும், முதற்படி மதபேதம் அறுத்திடுவதே. மத பேதம் மனத்தில் அறுத்திடல் வேண்டும். அத்திரை பற்றியிருக்கும் வரை உருவு காட்டாது. உருவாவது தன்னை இன்ஞர் எனக் காட்டாதது. இல்லறத் துறவிலே இருந்தே தான் முதல் துறவு. மற்றத் துறவுகள் இல்லறத் துறவைச் சுமந்து நடத்தும் பரிபாகம். பரிபாகமாவது புளியங்காயின் தசை கனிந்த காலத்து எவ்வண்ணம் ஒடும் தசையும் பிரிந்து இருக்கின்றதோ அவ்வண்ணமாகவும் சேற்றில்புகுந்து வெளியேறும் பிள்ளைப் பூச்சியின் சரீரத்தில் சேறு பற்ருமல் சேற்றிலிருந்தே நிர்மலமாக வெளியேறும் வண்ணமாகவும் வெளிவரவேண்டும். இல்வாழ்க்கைச் சேற்றுள் அதாவது இன்ப துன்பங்கள் விளைக்கும் வாயிலுள் தான் தலைமை பூண்டு இருந்தும் அவ்வாயில்களை நடத்தியும், அவைக்குள் சிக்கியும் சிக்காமல் இருந்தும், இல்லாமையாகியும் மதியை விளைவேற்ற உடைதரித்திருந்தும் மனத்தினிடத்து சாத்மீக நடையைப் பொருத்தி மனத்தில் ராசத நடையை அமர்த்தி ஆள்வோர் திகம்பரராம். மனத்தழுககு அருத மூட்டைகள் மௌன சாதனமா நின்ருல் உலக விருத்தியில் உள்ளம்அழுக்கற்றது அல்ல.

2. ஷண்மதமும் மாயாபந்த உருவாகும். இவ்ஆறு சுழலிடத்தும் சிக்கிய ஜீவர்கள் மீளார்கள். சுழல் நீர்வண்டு என சுழன்று ஜீவன் இடம் விட்டு நீங்கும். ஆணவ மலத்துள் அழுந்தி மேல் எழாமல் இருப்பதே இறப்பு. முக்கால்அழுத்தி கால் மேலே காந்தம் போல் இசைத்திருக்கும் தன் மாத்திரை நித்திரையாம். இத்தரம் கண்டோர்கள் இறக்கார்கள். மேல் உரைத்த ஆறு மதமும் விலக்கி நிற்பர். அவ்வாறும் விலக்கியக்கால் ஓர் மதமே உள்ளது. அது எது எனில் அ.இ. இரண்டு மதமும் இசைந்து தோன்றும் மதம். ஆண் பெண் என்பது ஒரு மதமேயன்றி மற்ற மதங்கள் இருள் விளைக்கும் மதம் ஆம்.

3. சுகுண நேத்திரத்தை மற்றொரு கரத்தால் மூடிய வண்ணம் ஆம். சாதிபேதங்களும் மதபேதங்களும் சாற்றுவ அனைத்தும் அழுக்காம். ஒன்றென நினைப்பதும் அழுக்காம். மேல் உரைத்த வண்ணம் பகுத்து அனுபவிக்கும் காலபேதம் வரும். அங்ஙனம் பேதம் இல்லையெனில் இல்லை. ஏன் எனில் குற்றம் என்பது எந்தக் காலத்தும் குற்றமா வகிப்பர் நாம் உரைப்பது அவ்வண்ணம் அல்ல.

4. சர்வ ஜீவத்துவமும் ஓர் ஜீவனுக்குள் அடங்கியிருப்பது என்று அறி. காரண சரீரமும் அடங்கியிருப்பது என்று அறி. எவை குற்றம் என்று உரைப்பது? சுத்தமும் குற்றமும் இரண்டும் இருப்பது என்று உரைப்பர். காரண சரீரத்தால் அனுபவிக்கின்றார் ஜீவர். அவ்வண்ணம் அனுபவிக்கின்ற ஜீவர்களுக்கு ஸ்தூலசரீரம் எனல் கூடாது. ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரம் ஒன்றே ஆதலால் அகில பேதமும் அற வேண்டும். புல்லர் சூழுமிடத்து நல்லோரும் இருந்து வாழவேண்டும். ஆகையால் சிறிது சிறிதாய் மனத்தில் அழுக்கற வேண்டும். இன்ன இடத்தில் இன்னது பெறப்படாது என்றும் அருந்தப்படாது என்றும் விளைத்திருக்கும் திரையை விலக்க வேண்டும். முற்றும் விலக்கில் புல்லரே சூழ்ந்திடுவர் ஆகையால் தாம் அறிந்து சிறிது சிறிதாய் நல்லோர் தீதோர் எனவும் மனத்துக்கு அசியும் விளங்கும் இடத்து அந்தபேதம் வகியாமல் நிகழ்தல் வேண்டும்.''

ஓம்

ஸ்ரீ நந்தியெங்குருவே துணை.

ஸ்ரீ நந்திகுருவே நமஃ:

# நவமணித் தோத்திரப் பாமாலை



தூயதுன்மதியாண்டு-துகளில் பங்குனிமதியில்சுபநன்னுளாம்
மேயபூரட்டாதி விளங்குமிருபத்தைந்தில் மேலோா போற்ற
தாயினும் பேரன்புடைய தயை நந்தியடிகளெனுஞ்
சுவாமிதானே
ஆயஇவ்வுலகதனி லவதரித்த திருநாளென்றறைவர்மாதோ.

## வேறு

சச்சிதானந்த சற்குருவாகி சர்வமும் நம்மலதிலாதுணர்ந்த
சகலகேவலமுதற் சமயோகவாழ்வுமெய் தன்னிற்
றனித்த துணையாய்
அச்சமதகற்றியருள் நற்சைவபோதசிவ வானந்தமய
மெங்குமாய்
அவனதுவுமறிவன்றிபிறி தென்றநிலையன்றிப்
பேசொணுத் திறமொன்றுமாய்ப்
பொச்சமில்நல்லன்பர் பேதமிலாதகத் தூற்றெடுத்தோங்கு
பொலிவே
பொருளல்லவற்றையொரு பொருளெனும்பொறியிலிப்
பொய்புகலு நொய்பேதையேன்
நச்சியுனதின்னடியை நவிலுதற்கருள்செய்த நாதனே
வேதமுடிவே
நாதபரபோதவேதாந்த சித்தாந்த **நடுநந்தி**யடி
யான பரமே : 1

அம்பாநிறைந்தபொது வதனிலேயன்பான அருள்நீர்
ததும்புநிலைவில்
அறிவரியஉயர்வுமெய் யமலநற்பிரமமாமரியதொரு
பெரியவித்தை






தனதுநிலையறியா[illegible]மொருதறுகணெடு
வெறிநாயினேன்

றன்னையேபொ[illegible]று மெச்சுநின்றயவைத்தயங்கி
நான்பெறுவதொன்றே

மனதறிவுஞானமுடனுண்ட பேரின்பமொடுமாசற்றதேசு
மதுவே

மட்டற்றயோகபோகத்தின் விளக்கமெலா மருவியுறு
பேறுமதுவே

நினதுபெறு தூயநன்னிலை மௌனகதியிலே நீடுபேரின்ப
முடிவே

நாதபரபோதவேதாந்த சித்தாந்த நடுநந்தியடி
யான பரமே : 6

பசுக்கடலிடத்திடைத்தோன்று செம்பரிதியாய்ப் பற்றற்ற
மனமிளிர்ந்து

பண்மையொடுவண்மையா மோனமின்மயமாகிபல்
கதிர்பிலிற்றலதனுல்

நிசிக்கருவறுத்துநீணிலவாதநெஞ்ச நன்னிமலமதினுள்
ளிருத்தி

நினைவுபகலிரவுடன் உருவற்ற அறிவுற்றுநின்மதி
துலங்குகதியைப்

பசிதர்கமொன்றின்றிப் பரவசப்பட்டு நான்பருகிக்
குளிர்ந்திருக்க

பரதவித்திடுசேயைபூர்த்திகொள நீவந்துபாவியேற்
கருள்வதென்றோ

நசிமசியுமுதலானமந்த்ரபதபேதமும் நாடுதற்கரிய
நலமே

நாதபரபோர்தவேதாந்த சித்தாந்த நடுநந்தியடி
யான பரமே : 7

**நாகப்பட்டினம் முத்து காயாரோகண செட்டியார்**



ஓம்

ஸ்ரீ நந்திகுருவே நம:

# ஸ்ரீ நந்தியடி சுவாமிகள் பஞ்சரத்தினம்

சச்சிதானந்தமேனிச் சம்புவைமனத்தில்வைத்தே
அச்சமும்பிறப்பும் நீத்த அருள் வடிவானதேசன்
இச்சையைநீத்தியாள்வன் இன்பமேபெரிதுற்றென்றும்
அச்சறுமேலா **நந்தியடிகளை** வணங்குவோமே. 1

சொல்லியதிருவஹீந்த்ர சுகந்தருநகரின்மாலைப்
புல்லியவைணவத்துப் பூசுரர்குலத்திற்றோன்றி
இல்லறந்தன்னிற்கூடி இனித்திருந்திந்தமண்ணை
அல்லலென்றகன்ற **நந்தியடிகளை** வணங்குவோமே 2

வெற்றிகொள்சான்றோர்செல்வர் வேந்தர்கள்நீதிநூலைக்
கற்றவர்வணங்கஞானக் கலையினையோதச்செய்து
முற்றறிவுடையோர்காண மோனமுய்மண்ணைநீத்த
நற்றவமார்ந்த **நந்தியடிகளை** வணங்குவோமே. 3

போக்கொடுவரத்துமில்லாப் புனிதனும்பரனைநெஞ்சில்
நோக்கியன்னேனைவேறுக் கண்டிடாநோன்மையாளன்
ஊக்கமாந்தொண்டர்பாவ மொழிந்திடத்தேற்றமான
ஆக்கஞ்சேர்மேலா **நந்தியடிகளை** வணங்குவோமே. 4

சுட்டறும்பரமஞானச் சுடரொளிதன்னில்நோக்கிக்
கட்டறுமின்பமாகுங் கடலிடைவீழ்ந்ததேசன்
தட்டறுமடியார்போற்றுஞ் சம்புவின்கலையதான
முட்டறுமோன **நந்தியடிகளை** வ்ணங்குவோமே. 5

வெண்பா

சத்திருந்த நந்தியடி சாமி பரமான
முத்தியடைந்தநாண் முன்வருடம் ‍!சித்திவரும்
**மாசிமதி**யில் வளர்பிறை **பஞ்சமி**சேர்
காசி **லிசுவதி** யேகண்.

இப்பஞ்சரத்தினம் பிரம்மஸ்ரீ நந்தியடி சுவாமிகளின்
பக்தர்களில் ஒருவர் இயற்றியது;

குருநாதன் திருவடி வாழ்க!

ஸ்ரீ நந்திகுருவே நம :

# ஸ்ரீ மார்க்கண்டேயர் துதி பஞ்சகம்

1. மதியால் விதியைவென்ற மார்க்கண்ட வல்லோய்
துதியாலுனைப் பரசிச் சூழ்வேன் - கதியாக
நீயெனக் குற்றின்னுள் என் நெஞ்சக் கவலையறத்
தாயெனச் செய்வாயின் றவை

2. நந்திபிரானுள்ளுருக நாடியன்று நீ புகழ்ந்த
செந்தமிழின் வல்லபத்திற் றீயனே - னுய்ந்திடவிங்
கோர்திவலை யீந்தா லுறுமோ குறையெந்தாய
பார்திருக் கணின்னுள் பரிந்து

3. குருநந்தியோடுசிவங் கொண்டனைக்கப் பெற்ற
ஒருநந் தன மார்க்கண்டோயே - திருநந்துன்
சேவடியே சோந்தேன் திவலை தெரித்தாளுனன்பில்
மேவடியே னுக்கு விழைந்து

4. வேதா சலத்து நந்திவித்தகர் நெஞ்சங்கனிய
ஓதா நின்றிட்ட தெய்வ ஒண்ணூர்க் - கீதாநான்
எவ்வாறு நந்திபிரானின் னடிக்காளாவேனின்
செவ்வாம்பல் வாய்திறந்து செப்பு.

5. பொற்கடவூர் புக்கரன்மெய்ப் பூசையினுல் மூவாத
நற்கடம் பெற்றுய்ந்த நறுங்குருந்தே - புற்கடத்தேன்
உய்யும்படிக்கோ ருளவுரைத் திட்டங்ஙனமியான்
செய்யும்படிக் கருளுஞ் செய்.

த்யித்திரிய உபநிஷத்தில், குருவை பூர்வ ரூபமாகவும், சிஷ்யனை உத்தர ரூபமாகவும், ஞானம் சந்தியாகவும் சொல்லப்பட்டிருக்கின்றது. **ஸ்ரீ நந்திகேஸ்வரரை** அடுத்த மாணுக்கர்களுக்கு ஞான சொரூபமான ஸ்ரீ மார்க்கண்டேயர் சந்ததியாக இருக்கின்றூர்கள்.

ஸ்ரீ நந்திகுருவே நம :

---

அச்சிட்டோா : அப்பர் அச்சகம், சிறுதையூர், லால்குடி.